அருள்மிகு சுயம்பு

சனீஸ்வரபகவான் திருக்கோவில்

குச்சனூர்

# திருத்தல வரலாறு



## திருக்கோவில் வெளியீடு


| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | - | 1970 |
| இரண்டாம் பதிப்பு | - | 1982 |
| மூன்றாம் பதிப்பு | - | 1983 |
| நான்காம் பதிப்பு | - | 1986 |
| ஐந்தாம் பதிப்பு | - | 1989 |
| ஆறாம் பதிப்பு | - | 1991 |
| ஏழாம் பதிப்பு | - | 1993 |
| எட்டாம் பதிப்பு | - | 1993 |
| ஒன்பதாம் பதிப்பு | - | 1993 |
| பத்தாம் பதிப்பு | - | 1994 |
| பதினொன்றாம் பதிப்பு | - | 1996 |
| பனிரெண்டாம் பதிப்பு | - | 1998 |
| பதிமூன்றாம் பதிப்பு | - | 1999 |
| பதிநான்காம் பதிப்பு | - | 2002 |
| பதினைந்தாம் பதிப்பு | - | 2003 |

விலை ரூ. 20.00

மணி ஆஃப்செட் பிரிண்டர்ஸ், உத்தமபாளையம். 98421 - 65327

உ

குச்சனூர்

# அருள்மிகு சுயம்பு சனீஸ்வர பகவான் திருக்கோவில்

# திருத்தல வரலாறு



சிவகிரி சமஸ்தான வித்துவான்

இராயகிரி திரு. மா. **அ. முத்துச்சாமிக் கவிராயரவர்கள்**

இயற்றிய

# தினகரன் மான்மியம்

(உரைநடையும், மூலக் கவிதைகளும்)

**கோவில் வெளியீடு**

குச்சனூர்

அருள்மிகு சுயம்பு சனீஸ்வர பகவான்



மூலவரும், உற்சவரும்

# எம்.எம். திருமலைமுத்து

நிர்வாக அறங்காவலர்

அ/மி சுயம்பு சனீஸ்வர பகவான் திருக்கோயில்

**குச்சனூர்.**

நவக்கிரகங்கள் தான் ஒவ்வொரு மனிதனின் உயர்வு தாழ்வுகளுக்கும் வழி வகுக்கக்கூடியது. நவக்கிரகங்களில் மிக முக்கிய பங்கினை சனிபகவான் வகுக்கின்றார். சனி பிடித்த பின்புதான், தான் என்ற கர்வம் போகின்றது. தான் வந்த வழியைத் திரும்பி பார்க்கின்றான். இதுவரையில் எப்படி வாழ்ந்தோம், இனிமேல் எப்படி இருக்க வேண்டும் என சிந்தித்து திருந்த வைப்பதே சனீஸ்வரனின் நோக்கமாகும்.

அப்படிப்பட்ட நவக்கிரக நாயகனான சனீஸ்வரனுக்கு இந்தியாவிலேயே தனிக்கோவில் குச்சனூரில் தான் உள்ளது. இந்தத் திருத்தலத்தின் தல வரலாறு 1905 ஆம் ஆண்டு எனது முன்னோர்களால் தினகரன் மான்மியம் என்ற நூலாக வெளியிடப்பட்டது. அவைகள் செய்யுள் வடிவில் இருந்தபடியால் பக்தர்கள் அனைவரும் எளிதில் படிக்க உரைநடையாகவும் எழுதி இரண்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இந்த தலவரலாற்றைப் படித்து வழிபடும் முறைகளின்படி சுரபி நதிக்கரையில் காட்சி தரும் அருள்மிகு சுயம்பு சனீஸ்வர பகவானை வழிபட்டு துன்பங்கள் நீங்கி இன்பம் பெற வேண்டுமென்று பிரார்த்தனை செய்து, பக்தர்களை அன்புடன் கேட்டுக் கொள்கின்றேன்.

**எம்.எம். திருமலைமுத்து**

நிர்வாக அறங்காவலர்

## காப்பு

ஆனை முகத்தோனை அப்பா சாதாசிவமே
கானக் குழலூதுங் கண்ணனே – பானுமகன்
ஆன சனிபகவான் அற்புதத்தைக் கூறுவதற்கு
ஞானமிகத் தந்தருள்வீர் நன்று

## அறிமுகம்

செண்பகநல் லூரென்னும் குச்சமா நகரில்
சிறப்போடு வீற்றிருக்கும்

வண்ணமிகு கரியநிற சனீஸ்வர பகவானை
வழுத்தியே முன்புஒருநாள்

எண்ணரிய பாக்களால் தினகரன் மான்மியம்
என்னுமோர் அரியநூலை

பண்பாளர் கவிராயர் முத்துச்சாமி யவர்கள்
பாடியரைத் தேடியறிந்து

நண்பர் திரு கருப்பையா உரைகாண விரும்பியே
நாடினார் என்னையொரு நாள்

பண்ணரிய நூலதை மகிழ்வோடு பெற்றுமே
படித்துஉரை கண்டுவரும் நாள்

பண்புமிகு அன்பர்திரு முத்துச்சோனை அதனைப்
பதிப்பிக்க முன்வந்தனர்

திண்மையுறு தினகரன் மாட்சியை அனைவரும்
தெரிந்திட உரைதந்துள்ளேன்.

## நன்றி

ஆக்கம் தந்த அறங்கா வலர்கட்கும்
ஊக்கம் தந்த உற்றநண் பர்கட்கும்
பாக்களால் தினகரன் மான்மியம் தன்னை
ஆக்கிய புலவர் அவர்கட்கும் நன்றி!

அன்புடன்
கு. செல்லையா
7. 4. 82

## அணிந்துரை

மனித வாழ்க்கை நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்தது. நம்பிக்கை தான் வாழ்க்கையின் உயிர்நாடி. சுவாசிக்கும்போது வெளியே விடும் காற்று திரும்பவும் தனதுள்ளுக்கு திரும்ப வந்து சேரும் என்ற நம்பிக்கையால் தான் மூச்சை வெளியிடுகிறோம். வயலில் விதைக்கும் தானியம் நன்கு விளைந்து தனக்கு அதிக அளவில் திரும்ப வந்து சேரும் என்ற நம்பிக்கைதான் நம்மை செயல்புரிய உந்துகின்றது. நம்பிக்கையின்றேல் வாழ்வில்லை.

பிறந்த குழந்தை தாயை அறிந்து கொள்ளுகிறது. இவர்தான் உன் தந்தை என்று தாய் காட்ட தந்தையை அறிகிறது. நம்புகிறது ஏன் ? எதற்காக ? என்று கேள்வி எழுப்புவதில்லை. மனிதன் தோன்றிய அநாதியான காலம் முதல் அறிஞர்கள், ஞானிகள் மக்கள் மத்தியில் தோன்றி இந்தப் பரந்த பிரபஞ்சத்தையும், அதில் அடங்கிய உயிர்வகைகளையும் கண்ணால், செவியால் உணர்வார். அறியப்படும் அனைத்தையும் காட்டி அவற்றைப் படைத்து வாழவைக்கும் இறைவனையும் அறிவித்து மக்களை உய்வித்திருக்கின்றனர். நம்பிக்கையுடன் அவர்கள் காட்டிய வழியில் வாழ்ந்து பின்னர் வரும் நமது வழித்தோன்றல்களுக்கும் வழிகாட்டியாக அமைந்து சிறப்புற்று வாழ்ந்து வருவது மனித சமுதாயம். இந்த வழியில் ஞானியர் காட்டிய நம்பிக்கையின் அடிப்படையில் இறைவனையும், இறைவனால் படைக்கப்பட்ட அனைத்தையும் நம்பி போற்றி அனைத்திலும் இறைமையைக் காணும் பெருமை கொண்டது மக்கள் சமுதாயம். இதில் காலத்தின் கோலத்தால் விபரீத சிந்தனை கொண்டு "கடவுளை நம்பாதே, மனிதனை நம்பு" என்ற குரலும் அண்மைக்காலத்தில் இங்கும் அங்குமாக கேட்கிறது. இதன்மூலம் என்றும் இல்லாத அளவில் இறைவன் மீது பக்தி பெருகியுள்ளதைப் பார்க்கின்றோம். எனவே அவ்வித புதிய குரல் கொடுப்போரையும், தமிழால் வைதாரையும் வாழ வைக்கும் எம் பெருமான் காத்தருள்வாராக.

மக்கள் வாழ்வில் ஒருபுறம் மகிழ்ச்சியும், இன்னொருபுறம் துக்கமும் இருப்பது ஏன் ? வினை விதைத்தவன் வினையையும் தினை விதைத்தவன் தினையையும் தானே அறுவடை செய்ய வேண்டும் ? எனவே தொடர்ந்து வரும் பிறவிகளில் செய்யும் வினையை அனுசரித்தே வரும் பிறவிகளில் மகிழ்வும் துக்கமும் அமைகின்றன. இருப்பினும் ஆன்றோர்கள் காட்டிய வழியில் இறைவனைப் பணிந்து இறையருள் பெற்று நம் வாழ்க்கையை வளமாக அமைத்துக் கொள்ளப் பாடுபடலாமல்லவா ? முப்பிறவியிற் செய்த பாவத்தின் காரணமாக இறைவனால் விதிக்கப்பட்ட விதியின் வலிமை கடுமையானது. அதை அனுபவித்துத் தான் தீர வேண்டும் என்பதைக் குறிக்கும் நளச் சக்கரவர்த்தி கதையும் இறைவனருளால் அவன்மீது செலுத்தும்

பக்தியின் வன்மையால் விதியின் வலிமையை மாற்றி துன்பத்தை துடைத்து மகிழ்வுற்ற தினகர மன்னன் புதல்வன் சந்திரவதனனின் கதையும் நமக்கு எடுத்துக்காட்டாக அமைகின்றன. இதனை இந்நூலுக்குள் புகுந்து படித்துப் புரிந்துகொள்ளும் வாய்ப்பு அன்பர்கட்கு கிடைத்திருக்கின்றது.

நீதிமன்றத்தில் பல குற்றவாளிகள் நீதிபதி அளிக்கும் தண்டனை எப்படியிருக்குமோ என்று நினைத்து வாடி வதங்குகின்றனர். அவர்கள் தங்கள் குற்றத்துக்கான தண்டனையை அனுபவித்தே தீர வேண்டியவர்கள் அனைவரும் ஒரே தன்மையான குற்றம் புரிந்தவர்கள். நீதிபதி அவர்களுக்கான தண்டனை விதிக்கிறார். அவர்களில் சிலருக்கு சிறை தண்டனை விதித்து குறையாதப்படி நடத்தும் படியும், மற்றவர்களுக்குத் தண்டனை விதித்து வசதிகள் எதுவுமற்ற மூன்றாம் வகுப்புக் கைதிகளாக நடத்தும்படியும் உத்திரவிடுகிறார். எல்லோரும் அனுபவித்தது சிறைத்தண்டனை தான் என்றாலும் முதல் வகுப்புக்கும், மூன்றாம் வகுப்புக்கும் வித்தியாசமுண்டல்லவா? இதில் தான் இறைவனைப் பணிந்து பக்தி செய்த புண்ணியமும், அப்படிச் செய்யாததால் அமையும் நிலையும் தெளிவாகிறது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டாமா? எனவே தான் தனது கர்ம பலனை அனுபவிக்க மண்ணில் பிறவி பெற்ற மனிதவர்க்கம் அக்கருமத்தை அனுபவிக்க வைக்கும் சனீஸ்வர பகவானின் திருக்கருணைக்கு உரியவர்களாக அவரைப் பணிந்து வணங்கி அருள்பெற்று இம்மையில் சுகமும் மறுமையில் உயர்வும் பெறத் தூண்டுகோலாயமைகிறது இந்நூல்.

நாட்டிலேயே தனக்கெனத் தனிக்கோவில் கொண்டு விடத்தலை மரம் தலவிருட்சமாக அமைய குச்சனூர் எனும் செண்பகநல்லூர்தனில், ஈஸ்வரன் விருப்பப்படி காமதேனு எனும் தெய்வப் பசுவின் மடியிலிருந்து சுரந்து வழியும் சுரபி நதியின் கரையில் மகிழ்வுடன் வீற்றிருந்து சேவை சாதிக்கும் சனீஸ்வர பகவானின் கருணாகடாட்சம் நமக்குக் கிட்ட வேண்டும் எனப் பணிந்து பக்தி செய்து நலம் பெற அனைவரும் ஒன்று சேருவோமாக.

நூலைப் படித்துப் பயன் பெறத்துடிக்கும் அன்பர்களைத் தாமதப்படுத்துவது எனது நோக்கமல்ல. இந்நூலை அனைவரும் புரியும்வண்ணம் உருவாக்கி அமைத்துக் கொடுத்த ஓய்வு பெற்ற தமிழாசிரியர் வித்துவான் திரு. கு. **செல்லையா** அவர்களுக்கும் இதனை ஏற்றமுறையில் வெளியிட்டு உங்கள் முன்கொண்டுவரும் எனது இளவர் திரு. மு. **முத்துச்சோனை** அவர்களுக்கும் நான் நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

குச்சனூர்
**8. 4. 82**

அன்புடன்
**தெ. கருப்பையா**

## முகவுரை

இறைவனுக்கும் நவக்கிரகங்களுக்கும் உள்ள தொடர்பையும், நவக்கிரகங்களுள் சனீஸ்வரபகவானின் சிறப்பையும், சனீஸ்வர பகவான் கோவில் கொண்டுள்ள தலங்களில் குச்சனூரென்னும் செண்பகநல்லூரின் கீர்த்தியையும் பக்தர்கள் அறிந்து கொள்ள வேண்டுமென்பதே இந்நூலின் நோக்கமாகும்.

சனீஸ்வர பகவான் செண்பகநல்லூரென்னும் குச்சனூரில் கோவில் கொண்ட புராண வரலாற்றையும், பகவானை முழு நம்பிக்கையோடு விடாது வழிபட்டு அவரது கருணைக்குரியவனாகிய சந்திரவதனனின் பக்தி மகிமையையும், நன்மகன் சந்திரவதனன் வாயிலாக நற்கதியடைந்த தினகர மன்னனின் மாட்சியையும் புலப்படுத்துவது தினகரன் மான்மியம் என்னும் நூல். திருநள்ளாற்றில் எழுந்தருளியுள்ள சனிபகவானால் நிடத நாட்டை ஆண்ட நளச்சக்கரவர்த்தி பேறு பெற்றதைப்போல் குச்சனூரில் எழுந்தருளியுள்ள சனி பகவானால் குலிங்க நாட்டை ஆண்ட தினகரன் என்னும் சக்கரவர்த்தி பேறு பெற்றுள்ளான். நளன் வரலாற்றில் ஊழ்வினை வெல்கிறது. தினகரன் வரலாற்றில் பக்தி வெல்கிறது...

தினகரன் மான்மியம் என்னும் இச்சிரிய நூல் முழுவதும் விருத்தப்பாக்களால் ஆனது. சென்ற நூற்றாண்டின் இறுதியில் இக்கோயில் முன்னாள் பரம்பரை அறங்காவலர்களுள் ஒருவரும், தமிழ்ப்புலமை பெற்றவரும் தரும சிந்தனையுடையவருமாகிய திரு.பூ.தி. முத்துப்பிள்ளையவர்களின் வேண்டுகோளுக்கிணங்க, சிவகிரி சமஸ்தான வித்துவான் இராயகிரி உயர்திரு. மா.அ. முத்துச்சாமிக் கவிராயரவர்களால் இயற்றப்பட்டது. திரு. முத்துப்பிள்ளையவர்களின் தமையனாரும், கோவில் பரம்பரை அறங்காவலர்களுள் ஒருவரும் தமிழ் பற்றுடையவருமாகிய பெருந்தகை திரு.பூ.தி. **சோணையாபிள்ளையவர்களால்** பதிப்பிக்கப்பட்டது. பல தமிழ்ப் புலவர்களின் சாற்றுக்கவிகளுடன் திகழ்வது இந்நூல். கம்பராமாயணத்துக்கு ஒப்பாக மதிக்கப்படும் நூலென்று புலவர்கள் பாராட்டியுள்ளனர். சாற்றுக்கவிகள் பாடியுள்ள புலவர்களில் தேவாரம் உ.வே.செல்லமய்யங்கார் அவர்கள் தம் சாற்றுக்கவி ஒன்றில் முதுநீர்வையும் இன்புறுநல் வைணவ புராணமதில் இயைத்தோங்கி இசையால் மாட்சி அன்பமையும் தினகரன் தன் மான்மியத்தை பண்புற நீஅறைக என்ன என்று கூறியிருப்பதால் இந்நூலில் காணப்படும் புராண வரலாறு வைணவ புராணத்திலுள்ளது என்று தெரிகிறது.

இந்நூலில் கண்ட புராண வரலாற்றை அன்பர்கள் எளிதில் புரிந்து கொள்ளும் பொருட்டு உரைநடையில் தரப்பட்டுள்ளது. இது பகவான் பக்தர்களுக்கு ஓர் அரிய விருந்தாக அமையும் என்பதற்கையமில்லை.

இவ்வளவு அரிய நூலின் பழஞ்சுவடி ஒன்றைக்கண்டு அதை அனைவரும் படித்துணர வேண்டுமென்ற பேராவல் கொண்டு தமிழ் புலவர்களைக் கொண்டு திருத்தச் செய்து உரை காண்பதற்கு உதவி, வெளியிடுவதற்கு விடாமுயற்சி செய்த பெருமை, தமிழ்ப் புலமையுடையவரும், கோவில் பரம்பரை அறங்காவலர் குடும்பத்தைச் சேர்ந்தவரும் கூட்டுறவுத்துறையில் உயர் பதவி வகித்து ஒய்வு பெற்றவருமாகிய **திரு.தெ.கருப்பையா** அவர்களையே சாரும். இந்நூல் வெளியிடுவதற்கு மூலகர்த்தா அவரேயாவார். அவருக்குத் துணை நின்று எனக்கு ஆர்வத்தையூட்டி இந்நூலைப் பதிப்பித்து வெளியிட வேண்டுமெ;ன்ற பெருநோக்கத்தோடு ஆவன **செய்தவர்** கோவில் பரம்பரை அறங்காவலர் குடும்பத்தைச் சேர்ந்தவரும், உசிலம்பட்டி தேர்வுநிலை பேரூராட்சி நிர்வாக அதிகாரியுமான **திரு.மு.முத்துச்சோனையாவார்**. மேலும் இந்நூல் வெளியிடுவதற்கு ஆதரவாக இருந்தவர்கள் தற்போதைய கோவில் அறங்காவலர் குழுத்தலைவர் **திரு.பி.எஸ்.டி.முத்துச்சோனையாபிள்ளை** அவர்களும் ஏனைய அறங்காவலர் குழுவினருமாவார்.

எனக்கு ஆக்கத்தையும், ஊக்கத்தையும் தந்த இவ்வனைவருக்கும் என் இதயம் கனிந்த நன்றி. இவைகளை யெல்லாம் நடத்தி வைக்கின்ற குச்சனூர் சனீஸ்வர் பகவானுக்கு எம் பணிவான அஞ்சலி.

குச்சனூர்
7. 4. 82

அன்பன்
**கு. செல்லையா**



செண்பகநல்லூரென்னும் குச்சனூரில், சுரபி நதியென்னும் சுருளிநதி ராஜவாய்க்காலின் மேல்கரையில் வீற்றிருக்கும் சூரியபுத்திரனாகிய அருள்மிகு சனீஸ்வரபகவானை தரிசிக்க விரும்பி தமிழகத்தின் அனைத்து மாவட்டங்களிலிருந்தும் வந்து பூஜித்துச் செல்லும் பக்தர்களுக்கும் இத்தலத்தைப் பற்றிக் கேள்விப்படாதவர்களுக்கும் மிகவும் பயன்படும் விதத்தில், சிவகிரி சமஸ்தான வித்துவான் **இராயகிரி உயர்திரு. மா.அ. முத்துச்சாமிக் கவிராயரவர்கள்** சென்ற நூற்றாண்டின் இறுதியில் இயற்றிய தினகரன் மான்மியம் என்னும் நூலை உரைநடையாக வெளியிட வேண்டுமென்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது. அந்தப் பணியைச் செய்யக்கூடியவர் **குச்சனூர் தமிழ் வித்துவான் திரு. கு. செல்லையா** அவர்கள் தான் என்று முடிவு செய்து, கோவில் பரம்பரைத் தர்மகர்த்தாக்களைக் கலந்து அவர்கள் ஒப்புதலும் பெற்று, அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி அவரிடம் கூறினேன். அவரும் மனமுவந்து ஏற்றுக்கொண்டு அனைவரும் படித்து எளிதில் உணரும் வண்ணம் உரைநடையில் எழுதிக் கொடுத்துள்ளார். அவருக்கு என் சார்பிலும், கோவில் பரம்பரைத் தர்மகர்த்தாக்கள் குழுவின் சார்பிலும் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

என் மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய அண்ணன் **திரு. தெ. கருப்பையா** அவர்கள் இந்நூல் வெளியிடுவதற்கு சகல உதவிகளும் செய்ததுடன், ஒப்பற்ற கருத்தாழமுள்ள அணிந்துரையும் தந்துள்ளார். அவருக்கும் என் மனப்பூர்வமான நன்றியைச் சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

என் முன்னோர்களும் தமிழ்ப் புரவலர்களுமாகிய அமரர்கள் **திரு.பூ.தி.முத்துப்பிள்ளை** அவர்களும் **திரு.பூ.தி. சோனையாபிள்ளை** அவர்களும், சிவகிரி சமஸ்தான வித்துவானைக் கொண்டு கவிகளால் இயற்றப்பட்ட தினகரன் மான்மியத்தை பக்தர்கள் அனைவரும் எளிதில் படிக்கும்படி உரைநடையில் அச்சிட்டு வெளியிட வேண்டுமென்று என் தந்தை முன்னாள் பரம்பரை தர்மகர்த்தா அமரர். **திரு.பூ.மு. முத்துக்கோனேரியாபிள்ளை** அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றுவதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய முச்சிறப்புகளையும் கொண்ட குச்சனூரில், பக்தர்கள் வேண்டுதலுக்கிணங்க வரப்பிரசாதங்களை வழங்கிவரும் அருள்மிகு சனீஸ்வரபகவானை பூஜித்து வரும் பக்தர்களுக்கும், இந்நூலைப் படித்து அதன் மூலமாக பிரார்த்தனை செய்யும் பக்தர்களுக்கும் இந்நூல் வழிகாட்டியாக அமையுமென்று கருதுகின்றேன்.

அருள்மிகு சனீஸ்வரபகவானை வழிபடும் பக்தர்கள் அனைவருக்கும் அவர்கள் துன்பங்கள் நீங்கி பேரின்பம் பெற்றுய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொள்கிறேன்.

குச்சனூர்
10. 4. 82

இவண்
**எம். முத்துச்சோனை**
*நிர்வாக அதிகாரி (தேர்வு நிலை)*
உசிலம்பட்டி பேரூராட்சி



# சனி பகவானது சிறப்பு

தெய்வத்தை நம்புகிறவர்கள் ஜோதிடத்தை நம்புகிறார்கள் ஜோதிடத்தை நம்புகிறவர்கள் - நவகோள்களின் பலனை எதிர்பார்க்கிறார்கள். நவகோள்களின் முக்கிய நாயகனாக விளங்கும் 'சனி'யைப் பற்றியே அதிகம் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள். சனி பகவான் ஜாதகத்தில் எங்கே இருக்கிறார் என்று முதன் முதலாக கேள்வியும் கேட்டு நிற்கிறார்கள்.

தெய்வத்தை நம்புகிறார்களோ இல்லையோ, ஜாதகத்தை நம்புகிறார்களோ இல்லையோ மற்ற கிரகங்களின் பலன்களைப் பற்றிக் கவலைப்படுகிறார்களோ இல்லையோ 'சனி'யைப் பற்றி தெரியாதவர்கள் உள்பட—அகப்பட்டவனுக்கு அஷ்டமத்திலே சனி ஓடிப் போனவனுக்கு ஒன்பதிலே குரு என்று தங்களையும் அறியாமல் கஷ்டம் வரும்பொழுது சொல்வதைக் கேள்விப்படுகின்றோம்.

சாதாரண பாமர மக்களுக்கு கூட 'துன்பத்தை' தருபவர் சனி பகவான் தான் என்ற நம்பிக்கை அவர்களது இரத்தத்திலே ஊறிவிட்டது. விஷயம் தெரிந்தவர்கள் கூட விளையாட்டாக சொல்வதைப் பார்க்கலாம். முப்பது வருஷம் வாழ்ந்தவனும் கிடையாது. முப்பது வருஷம் வீழ்ந்தவனும் கிடையாது என்று எதற்காக இதைச் சொல்கிறோம் என்று அவர்களுக்கு தெரியுமோ தெரியாதோ ஆனால் சனிபகவான் ஒரு ராசியிலிருந்து புறப்பட்டு 12 இராசிகளைச் சுற்றி மீண்டும் அதே இராசிக்கு வரும்பொழுது முப்பது ஆண்டுகள் ஆகிவிடும். எனவே சனிபகவான் கருணையினால் வீழ்ந்தவர்கள் மீண்டும் வாழ்வார்கள். ஓகோ என்று கொடி கட்டிப் பறந்தவர்கள் கிரகங்களின் காரணமாக சனி பகவான் பார்வையால் வீழ்ந்து விடவும் செய்வார்கள். இது வரலாறு காட்டும் உண்மை.

## சனி பகவானது குணம்

அப்படியானால் சனீஸ்வரர் கெடுதலை மாத்திரம் செய்வரா நன்மையே செய்யமாட்டாரா என்ற கேள்வி வரும். உண்மையாகச் சொல்லப்போனால் அல்லது அனுபவ ரீதியாக பார்க்கப் போனால் சனி பகவானைப் போல் கொடுப்பாரும் இல்லை, கெடுப்பாரும் இல்லை என்ற தாரக மந்திரம். சனி பகவான் கருணையுள்ளவர் என்றும் நன்றாகவே நமக்குச் சுட்டிக் காட்டுகிறது.

இன்னும் சொல்லப் போனால் தனத்திற்கு அதிகாரியாகச் செயல்படுபவன் சனீஸ்வரன்தான் என்று தாராளமாக நம்பலாம். அதனால் தானோ என்னவோ ஸ்திரமான காரியத்தைச் செய்ய வேண்டும் என்றால் பணவரவு குறைவின்றிக் கிடைக்க வேண்டினால் சனிபகவானுக்குப் பிடித்த சனிக்கிழமை அன்று புதிய தொழில்கள் தொடங்கலாம். சனிபகவானுக்கு பிரார்த்தனைகளைச் செய்துவிட்டு அவரை நம்பி எந்த காரியத்தையும் செய்வதால் வெற்றி உங்களுக்கு நிச்சயம் தான். அப்படிப்பட்ட சனிபகவானுக்கும் பூலோக வாழ்க்கைக்கும் நிறைய தொடர்பு உண்டு. அது எப்படி என்பதில் முதலில் நாம் தெரிந்து கொள்வது நல்லது.

## சனிபகவானுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்?

சனிபகவான் சூரிய பகவானின் புத்திரர். அவர் நீலா தேவியின் கணவர், வலது கையில் அம்பும், மேல் இடது கையில் வில்லும் வைத்திருப்பார். அவரது கீழ் கையில் வாளும், வரதமும் கொண்டு அருளி பாலிப்பவர்.

சனிபகவானின் அதி தேவதை யமன் ஆவார். நீதி தேவனாக இருந்து, நித்தமும் நம்மை ஆட்டி வைக்கும் சனீஸ்வரன் எட்டாவது எண்ணுக்குரியவர். எட்டு என்பது அஷ்டமம் என்று ஜோதிட ரீதியாக சொல்லப்படுவது. எனவேதான் எட்டாமிடத்தில் எந்த கிரகம் இருந்தாலும் அந்த கிரகங்கள் அனைத்தும் சனி பகவானின் ஆட்சிக்கு கட்டுப்பட்டுத் தான் நடக்க வேண்டும்.

மரணத்திற்கு ஒப்பான பல்வேறு துன்பங்களை, சனிபகவான் ஒருவருடைய ஜாதகத்தில் எட்டாம் வீட்டில் இருக்கும்போது கொடுப்பதில் தான் சனியைப் போல் கெடுப்பாரில்லை என்ற அனுபவப் பழமொழி வந்தது. சனி பகவான் எட்டாமிடத்தில் இருந்தால் மரணம் என்று கருதப்படக் கூடாது என்பதையும் வாசகர்கள் இங்கே குறித்துக் கொள்ள வேண்டும்.

## சனிக்குப் பிடித்த நிறம் நீலம்

சனிபகவான் நீலாதேவியின் கணவர் என்பதால் சனிபகவானது அனுகிரகத்திற்கு நீலநிறம் உகந்தது. வானம் நீலநிறமாக இருப்பதும் கடல்நீல நிறமாக இருப்பதும் சனிபகவான்

இந்த உலகத்தை ஆட்டிக் கொண்டிருக்கிறார் என்பதைச் சொல்லாமல் சொல்லாம். சனி பகவான் கறுப்பு நிறமாக ஜொலிப்பவர். எனவே கருப்பு நிறத்தை அணிந்து கொண்டால் சனிபகவானுக்கு மிகவும் பிடிக்கும்.

## சூரியனுக்கும் சனிக்கும் உள்ள வேறுபாடு

சூரியனுடைய புத்திரர் என்பதால் சூரியனுக்கு நேர் எதிராக எல்லாச் செயல்களையும் செய்பவர் சனிபகவான் தான். சூரியன் கிழக்கே உதிக்கிறார். சனியோ மேற்கில் உதிக்கிறார். சூரியன் சிவப்பு நிறம் என்றால் கருப்புநிறம் சனி பகவானுக்குச் சொந்தம். சூரியன் சுறுசுறுப்பாக இயங்கக் கூடியவர் என்றால் அதற்கு நேர் எதிராக சனிபகவான் மிகமிக மெதுவாக சோம்பேறியைப் போல நத்தை ஊர்ந்து வருவது போல மிகவும் தாமதமாக நடந்து வருபவர். அதனால்தான் சூரியன் ஒரு இராசியைக் கடக்க ஒரு மாதம் எடுத்துக் கொள்கிறார். ஆனால் சனிபகவானோ அதே ராசியைக் கடக்க இரண்டரை ஆண்டுகள் எடுத்துக் கொள்கிறார். இதை வைத்து சனி பகவானது போக்கை நாம் புரிந்து கொள்ள முடியும்.

ஜோதிடத்தில் சனிபகவான் விசேஷ இடத்தைப் பெறுகிறார். இராசிகளில் மகரம், கும்பம் ஆகிய இரண்டு இராசிகளுக்குச் சொந்தக்காரர். தனக்கு என்று 19 வருடத்தை எடுத்துக் கொள்பவர். சந்திரனைக் கலங்க அடிப்பவர். அதோடு மட்டுமின்றி – சந்திரன் இருக்கும் முன் இராசிக்கு வந்த போதே ஏழரைச் சனியாக தொந்தரவு கொடுப்பவர் சந்திரன் இருக்கும் இராசிக்கு வந்தபின்பு சொல்லவொண்ணாத் தடங்கல்களை ஏற்படுத்துபவர். சந்திரன் நின்ற இராசிக்கு அடுத்த இராசியில் "பாதச் சனியாக" இருந்து எந்தக் காரியத்தையும் உடனே செய்யவிடாமல் தடுத்து தடுத்து பின்பு அருள் பாலிப்பவர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## இராகுகாலமும் – எமகண்டமும்

ஏன் அவ்வளவு தூரத்திற்குப் போவானேன் ? தினசரி நாம் என்ன நட்சத்திரம் என்பதைத் தெரிந்து கொள்கிறோமோ இல்லையோ இராகு காலத்தையும் – எமகண்டத்தையும் பற்றி நன்கு தெரிந்து கொண்டிருக்கிறோம். இந்த எமகண்டமும், ராகு காலமும் வேறு

யாருமல்ல சனிபகவானின் பிரதிநிதிகள் தான். ஆக நம்மோடு தினமும் வாழ்க்கையில் விளையாடுபவர் சாட்சாத் சனீஸ்வரன் அவர்களே ஆவார்.

இன்னொன்றையும் நாம் சனியைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டும். சனிபகவானுக்கு சூரியனுடைய பராக்கிராமத்தை விட பலமடங்கு பராக்கிரமம் உண்டு. சனி பகவானின் இரு பிரதிநிதிகள் என்று சொன்னேன் அல்லவா – இந்த் இராகு காலமும் – எம கண்டமும் இராகு மகாதசையும் – கேது மகாதசையும் ஆகும். இப்பொழுது ஒரு சின்ன கணக்கைப் போட்டுப் பாருங்கள்.

## ஜாதகத்தில் சனிபகவானது ஆட்சி

சூரியன் ஆறு வருடம் தான். சந்திரன் பத்து வருடம். செவ்வாய் ஏழு வருடம். இராகு பதினெட்டு வருடம். புதன் பதினேழு வருடம். கேது ஏழு வருடம். சுக்கிரன் இருபது வருடம் என்று மொத்த நூற்றி இருபது வருடங்கள் நவக்கிரகத்தின் மகாதசையாகும். எல்லோருமே சுக்கிரனுக்குத்தான் இருபது ஆண்டுகள் என்று தவறாக கணக்கிட்டு பேசுவார்கள். ஆனால் சனிபகவானுக்குத் தான் அதிக செல்வாக்கு என்பதை நாம் இப்பொழுது பார்க்கலாம். எப்படியென்றால் சனிபகவானுக்கு மட்டும் மொத்தம் பத்தொன்பது ஆண்டுகள் என்றாலும் அவருடைய பிரதிநிதியாக முழுக்க முழுக்கச் செயல்படும் இராகு பகவானுக்கு பதினெட்டு ஆண்டுகள், கேது பகவானுக்கு ஏழு ஆண்டுகளும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. ஆக சனிபகவானுடைய மகாதசையை இரகு மகாதசையான பதினெட்டு ஆண்டுகளோடும் கேது மகாதசையான ஏழு ஆண்டுகளோடும் கூட்டினால் மொத்தம் 44 ஆண்டுகள் மனிதருடைய வாழ்வில் சனிபகவான் ஆட்சி செலுத்துகின்ற உண்மை புரியும்.

எண் கணித கணக்குப்படி 44ஐ தனித்தனியாகக் கூட்டினால் 4 + 4 = 8 வருகிறது. எட்டு என்பது சனிபகவானுடைய எண் என்பதை நீங்கள் ஏற்கனவே அறிவீர்கள். ஆக நவக்கிரகங்களின் மொத்த தசை 120 ஆண்டுகள். இதில் மூன்றில் ஒரு பங்கை சனி பகவான் தன் வசம் வைத்துக் கொண்டிருக்கிறார்.

## பூமிக்கும் சனிபகவானுக்கும் உள்ள தொடர்பு

நமது பூமிக்கும் சனிபகவானுக்கும் என்ன சம்பந்தம்? என்று வாசகர்கள் கேட்கலாம். தினமும் காலையில் எழுந்தவுடன் தம் கண்ணில் தெரிவது சூரியன். சூரியனுடைய வட்டத்திற்கு பின்பும் பரந்து கிடப்பது நீலவானம்தான். அதுமட்டுமல்ல சூரியனுடைய ஏழு வர்ணங்களுள் மிகவும் சக்தி வாய்ந்ததுமான வர்ணம் நீலவர்ணம்தான்.

நீலவர்ண கிரணங்கள் நம் உடலில் வேகமாகப் பாயும்பொழுது அதில் வேகமும் எழுச்சியும் இருந்தாலும் அவை அத்தனையும் விஷத்தன்மை வாய்ந்தது. அந்த விஷத்தன்மை நம் கண்களில் முதலில் தாக்கும் பொழுது பார்வை சம்பந்தமான வியாதிகள், கோளாறுகள் ஏற்படுகிறது. இதை வைத்துத்தான் சூரியனுக்கு உச்சமாக விளங்கும் மேஷ ராசியில் சனிபகவான் இருந்தால், அவர்களுக்கு பார்வைக் கோளாறு ஏற்படும் என்று ஜோதிடர்கள் சொல்லுவார்கள்.

## கருப்பு நிறமும் சனீஸ்வரரும்

நீல நிறத்தை கண்ணில் படாது மறைக்க நாம் கருப்புக் கண்ணாடியை அணிகிறோம். இதை அணிவதால் கண்கள் எரிச்சல் அடைவதில்லை. நீலத்தன்மையான விஷயங்கள் நம் கண்ணில் புகுவதில்லை. இப்பொழுது விஷயத்திற்கு வருவோம். சனி பகவானுடைய நிறம் கருப்புத்தானே. கருப்பை அணிந்தால் சனிபகவான் விருப்பப்படுவார்தானே. கருப்புக் கண்ணாடி சனியாக இருப்பதால் விஷத்தை அவர் ஒடுக்குகிறார். எனவே கண்களில் கோளாறுகள் ஏற்படுவதில்லை என்ற செய்தி தெரிகிறதல்லவா?

இதற்குப் பெயர்தான் சனீஸ்வரர் என்பது. இதை வேறொரு முறையிலும் எடுத்துக் காட்டலாம். நவக்கிரகங்களுக்கு மொத்த தசாகாலம் நூற்றி இருபது. இதில் மூன்றில் ஒரு பங்கு சனிபகவான் வைத்திருக்கிறார். மூன்று பங்கு கடலாகவும், ஒரு பங்கு பூமியாகவும் இருக்கும் இந்த உலகத்தில் நாம் பிறந்திருக்கிறோம். அந்த ஒரு பங்கு பூமியும் சனீஸ்வரருக்குச் சொந்தம் என்பது மிகவும் நன்றாகத் தெரிகிறது. இன்னும் சொல்லப் போனால் பாக்கி மூன்று பங்கு கடலின் நிறமே நீலம் தானே.

இந்த ஆராய்ச்சியை வைத்துப் பார்த்தால் ஒரு பங்கு பூமியை சனீஸ்வரன் தன் நேரடி ஆதிக்கத்திலும், பாக்கி இருக்கும் மூன்று பங்கு கடலிலும் தன் நீல வர்ணத்தைப் பாய்ச்சியும் – இந்த பூமியை தன் இஷ்டப்படி விளையாடிக் கொண்டிருக்கிறார் என்பது நன்றாகத் தெரிகிறதல்லவா.

அப்படிப்பட்ட சனீஸ்வரரைப் பற்றியும் அவருடைய வரலாறு பற்றியும், அவரை எப்படியெல்லாம் பூஜிக்க வேண்டும் என்பதைப் பற்றியும் அவரது பார்வையால் ஏற்படக்கூடிய பலாபலன்களைப் பற்றியும் இப்பொழுது பார்க்கலாம்.

## சனிபகவானின் வரலாறு

இந்த உலகை அனுதினமும் தன் வெப்ப சக்தியால் காத்து வருபவர் சூரியபகவான். சூரிய பகவானுக்கு இரண்டு மனைவிகள். அவர்கள் இருவரது பெயர்களும் உஷாதேவி, சாயாதேவி என்பது ஆகும். சனிபகவான் சாயாதேவியின் மைந்தன் ஆவார் என்று சுருக்கமாகச் சொல்லி விடலாம்.

ஆனால் ஓரளவுக்காவது சனி பகவானது வரலாற்றை நம் வாசகர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதால் மிகவும் சுருக்கமாக இங்கே சொல்லி விடுகிறேன்.

சூரியபகவான் சுவர்ச்கலா தேவியை மணந்து கொண்டார். பிரபல முனிபுங்கவரான "திவிஷ்டா" என்பவரின் மகள் தான் சுவர்ச்சலாதேவி. இவளுக்கு வேறு மூன்று பெயர்களும் உண்டு. அவை மைக்ஞா, ஸரேணு, ராக்ஞ, தரபாஸக என்பவை ஆகும்.

சூரியனுக்கும் சுவர்ச்சலா தேவிக்கும் இரண்டு மகன்களும் ஒரு மகளும் பிறந்தனர். வைவஸ்தமனு, யமதர்ம ராஜன் என்று சூரியனுடைய இரண்டு மகன்களுக்குப் பெயர் சூரியனுடைய மகளுக்கு யமுனை என்று பெயர்.

## யமதர்மராஜனும், யமுனையும்

இங்கே வாசகர்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது இதுதான். சூரியனுக்கும் சுவர்ச்சலாதேவிக்கும் பிறந்த மூவருள் மூத்தவன் வைவஸ்தமனுவைத் தவிர யமதர்மராஜனும், யமுனையும் இரட்டை பிறவியர்.

சூரியனுடன் இல்லறம் நடத்திக்கொண்டு தன் மூன்று குழந்தைகளையும் அன்பாக வளர்த்துக் கொண்டிருந்தாலும் சூரியனுடைய மனைவியான சுவர்ச்சலாதேவிக்கும் சூரியனோடு இல்லறம் நடத்த போதுமான சக்தி இல்லை.

சூரியனுடைய உக்கிரத்தை தாங்கும் சக்தி குறைந்து கொண்டே வருவதை உணர்ந்த சுவர்ச்சலாதேவி, இதை கணவனான சூரியனிடம் சொன்னால், சூரியனின் கோபத்திற்கு ஆளாகலாம் என்று பயந்து தவம் செய்யப் போவதாகச் சொல்லி கானகம் சென்றாள்.

## சாயாதேவி தோன்றிய கதை

சுவர்ச்சலா தேவிக்கென்று சில சக்தி இருந்தது. தான் இல்லாத சமயத்தில் சூரியனுக்கு ஏற்பாடு மோகத்தைத் தவிர்க்க தன் நிழலையே ஒரு பெண்ணாக, அதுவும் தன்னைப்போல் ஒரு பெண்ணாக மாற்றி, அவளுக்கு சாயாதேவி என்று பெயர் சூட்டினாள்.

பின்னர் சுவர்ச்சலாதேவி, சாயாதேவியை அழைத்து நான், சூரியபெருமானுடன் இல்லறம் நடத்தும் சக்தியை இழந்து விட்டேன். மீண்டும் அந்த சக்தியைப் பெறுவதற்காக கானகம் வந்துள்ளேன். நான் தவம் செய்து மீண்டும் அந்த சக்தியைப் பெறுவதற்கு சில காலமாகலாம். அதுவரை எனக்குப் பதிலாக என் சாயலில் இருக்கும் நீ சூரியனுக்கு மனைவியாக வாழ்ந்து கொண்டிரு என்று அறிவுரை கூறினாள்.

அதோடு மட்டுமல்ல அங்கே எனது மூன்று பிள்ளைச் செல்வங்கள் இருக்கின்றனர். அவர்களையும் கண் கலங்காது காப்பாற்றிக் கொண்டிரு என்றும் ஆணையிட்டாள். சுவர்ச்சலா தேவியின் இந்த ஆணையையும், வேண்டுகோளையும் ஏற்று சூரியனுக்கு மனைவியாக வாழப் புறப்பட்டாள்.

## சாயாதேவியின் பயம்

புறப்படும்பொழுது சாயாதேவி சுவர்ச்சலா தேவியிடம் நான் தங்கள் சொற்படியே சூரியனுக்கு மனைவியாக தங்கள் சார்பில் நடந்து கொள்கிறேன். ஒரு வேளை நான் யார் என்பது சூரியனுக்குத் தெரிந்துவிட்டால் அப்பொழுது நான் என்னைக் காப்பாற்றிக் கொள்ள

தங்களைப் பற்றியும் தங்களது வேண்டுகோளைப் பற்றியும் தாங்கள் எனக்கு ஆணையிட்ட கதையைப் பற்றியும் சொல்லி விடுவேன் பிறகு என்னைப் பழிக்காதீர்கள் என்று சொன்னதை, முதல் மனைவியான சுவர்ச்சலா தேவி ஏற்றுக்கொண்டாள்.

சுவர்ச்சலா தேவி தான் யார் என்பது யாருக்கும் தெரியக் கூடாது என்பதற்காக குதிரை உருவம் கொண்டு தவம் செய்யத் தொடங்கினாள். அங்கே சாயாதேவி சுவர்ச்சலாதேவி போல் சூரியனுடன் இல்லறம் நடத்த ஆரம்பித்தாள்.

## சனீஸ்வரன் பிறந்தார்

சூரியன் சாயாதேவிக்கு மூன்று குழந்தைகள் பிறந்தனர். ச்ருதச்வஸி, ச்ருதகர்மா என்ற இரு மகன்களும் தபதி என்ற மகளும் பிறந்தனர். இவர்களில் ச்ருதகர்மா என்ற பெயருடைய சூரியன் சாயாதேவிக்கு பிறந்தவர் தான் பின்னாளில் சனீஸ்வராக மாறினார். சனீஸ்வரர் – அதிக பலமுள்ளவர். இரண்டாவது மனைவிக்கு பிறந்தவர்.

யமனும், யமுனையும் ஒட்டிப்பிறந்த இரட்டையர். யமுனை பின்னர் நதியாக மாறினாள். தபதி சூரியனின் இரண்டாவது மனைவிக்கு சனீஸ்வரரின் சகோதரியாகப் பிறந்தவர். பின்னர் தபதி நதியாக இன்று ஓடி கொண்டிருக்கிறாள்.

யமதர்மராஜன் ஸ்வஸ்தமனு ச்ருதச்வஸி, யமுனை தப சனீஸ்வரரின் சகோதரிகள்.

## யமதர்மராஜனின் குற்றச்சாட்டு

சாயாதேவி சூரியனுடைய இல்லத்தில் தன் குழந்தைகளான ச்ருதச்வஸி ச்ருதகர்மா ஆகியோருடன் மகள் தபதியுடன் இன்பமாக வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுது யமதர்மனுக்கு தன் தாயாரான சாயாதேவியின் மீது ஒரு வித அதிருப்தி ஏற்பட்டது.

சாயாதேவி – உண்மையில் அன்பாக நடந்து கொள்ளவில்லை. தன்னையும் தன் சகோதரரான ஸ்வஸ்தமனு, யமுனையிடம் வித்தியாசம் கொண்டு நடக்கிறார். ஆனால் அதே சமயம் ச்ருதச்வஸியிடமும் ச்ருதகர்மா தபதியின் மீது மிகுந்த அன்பின் கருணையும் காட்டுகிறாள் என்று வருந்தி, இதை தன் தந்தையான சூரியபகவானிடம் சொல்லிவிட்டார் யமதர்மன்.

அவ்வளவுதான் சூரியபகவானுக்கு ஆத்திரம் பொங்கிற்று. உடனே சாயாதேவியை அழைத்தார். சூரியபகவானின் உக்கிரத்தையும், ஆவேசத்தையும் கண்டு துடிதுடித்துப் போனாள் சாயாதேவி. பின்னர் வேறுவழியில்லாமல் உண்மையில் தான் யார் என்பதையும் சுவர்ச்சலா தேவி கானகத்தில் கடும் தவம் புரிந்து கொண்டிருப்பதையும் சொல்லி தான் செய்த பிழையை மன்னிக்கும்படி வேண்டினாள்.

## சூரியனுக்கும் இரண்டு மனைவிகள் ஏற்பட்ட விதம்

சூரியன் சாயாதேவியை மன்னித்து விட்டார். அதே சமயம் கானகத்தில் குதிரை உருவில் தவம் புரிந்து கொண்டிருந்த தன் மூத்த மனைவி சுவர்ச்சலா தேவியையும் உடனே வரச்சொல்லி அவளிடம் உக்ரகம் காட்டாது மென்மையாக நடந்து கொண்டார். அதனால் தான் சூரியனுக்கு இரண்டு மனைவிகள் ஏற்பட்டனர்.

## தென்திசையும், யமனும்

யமதர்மராஜனும், பின்னர் தன் கடுமையான தவத்தின் பயனாக காலன் என்ற பெயர் பெற்று தென்திசைக்கு அதிபரானார். அழித்தல் தொழிலுக்கு ஏகபோக சக்கரவர்த்தி ஆனார்.

அதனால்தான் தென்திசை என்றால் அது எமனைக் குறிக்கும். எனவே தான் இன்றைக்கும் பிதுர்களுக்கு வேண்டிக் கொள்கிறவர்கள் தென்திசையை நோக்கி கர்மாக்களைச் செய்கிறார்கள்.

யமன் இப்படிப் பிரிந்து தனியாகப் போனார். யமனின் கூடப் பிறந்த சகோதரரான ஸ்வஸ்தமனு – பின்னர் மனுவாக மாறி

நீதிதேவனாக பதவி உயர்வு பெற்று உலகத்திற்கு நீதியாக இன்றும இருந்து வருகிறார். எனவே தான் இன்றைக்கும் மனுநீதி சாஸ்திரத்தை நாம் வழிவழியாக ஏற்றுக் கொள்கிறோம்.

அண்ணன், தம்பி இரண்டு பேரும் இப்படியாக மாறிய பிறகு அவர்களுடன் கூடப்பிறந்த தங்கையான யமுனா, பூலோகத்தில் யமுனா நதியாக மாறினாள். மொத்தத்தில் சூரியனின் முதல் மனைவியின் மக்கள் மூவரும் மூன்று விதமாக மாறிவிட்டனர்.

## சாயாதேவியின் பிள்ளை

இப்பொழுது நாம் சூரிய தேவனின் இரண்டாவது மனைவியான சாயாதேவிக்குப் பிறந்த சனீஸ்வரனும், தபதியும் ச்ருதச்வஸியும் என்ன ஆனார்கள் என்பதைப் பார்ப்போம்.

தபதி சமவரணன் என்ற அரசனைக் காதலித்து மணந்து கொண்டு விந்திய மலையில் வாழ்ந்தவர். பின்னர் புண்ணிய நதியாக தபதி என்ற பெயரில் இன்றைக்கும் ஓடிக் கொண்டிருக்கிறாள்.

ச்ருதச்விஸி – திருமணம் ஏதும் செய்து கொள்ளாமல் மேரு மலையை நோக்கி நடந்து அங்கு நீண்ட காலமாக தவம் புரிந்து, மனுநீதியைப் போல் உலகத்து மக்களுக்கு நல்ல நீதிகளை நாள்தோறும் வழங்கி பெயரும் புகழும் பெற்று சிறப்போடு வாழ்ந்து வந்தார்.

இப்பொழுது மீதமிருப்பது சனீஸ்வரன்தான். இவர்தன் தாயார் சாயாதேவியோடு வாழ்ந்து வந்தாலும் சூரியனான தன் தந்தை தாயாரைக் கொடுமைப்படுத்திய அந்த சம்பவத்தை இன்னும் மறக்கவே இல்லை. எனவே அவருடைய எண்ணங்கள் செயல் எல்லாம் சூரியனுக்கு நேர் எதிராகவே இருந்தது.

## சூரிய பகவானுக்கு நேர் எதிரி சனிபகவான்

ஏற்கனவே நிறம் கருப்பாக இருப்பதாலும், சனியுடைய செய்கைகள் எல்லாம் தனக்கு நேர் எதிராக இருப்பதாலும் சூரியனுக்கும் தன் மைந்தன் சனியின் மீது ஒரு வித காழ்ப்பு உணர்ச்சி இருந்து கொண்டே வந்ததால், பின்னர் இருவருமே ஒருவருக்கொருவர் பகையாளி போல் நடந்த கொண்டே இருந்தார்கள்.

சனிபகவானுக்கு சர்வேஸ்வரரான சிவபெருமான் மீது ஆழ்ந்த பக்தி இருந்தது. தான் ஒரு ஈஸ்வர நிலையை அடைய வேண்டும் என்று தாயாரிடம் அனுமதி பெற்று காசிக்கு வந்தார்.

காசியில் லிங்கம் ஒன்றை பிரதிஷ்டை செய்து தனக்கு உயர் பதவி வேண்டும் என்று கடுமையாக பல ஆண்டுகள் தவம் செய்தார். சனி பகவானது பக்திப் பிரவேசத்தில் மெய் சிலிர்த்துப் போன சிவபெருமான் தம்பதி சகிதம் அவர்முன்பு காட்சி அளித்தார்.

## சனீஸ்வரர் என்ற உன்னத நிலை

சிவபெருமான் புன்னகையோடு சனியை நோக்கி, சூரியனின் மைந்தனே உமக்கு யாது வரம் வேண்டும் என்று கேட்டார்.

சர்வேஸ்வரா என் தந்தையை விட அதிகமாக பலத்தையும் பார்வையையும் எனக்கு அளிக்க வேண்டும். கூடப்பிறந்த அனைவரும் தங்கள் கிருபையால் உன்னத நிலைக்கு ஏகிவிட்டனர். நானோ அவர்களை விட மிகவும் பலசாலியாகவும் பராக்கிரமமுள்ளவனாகவும் ஆக வேண்டும். இன்னும் சொல்லப் போனால் தங்களுக்கு அடுத்த ஸ்தானத்தை நான் கண்டிப்பாக பெற வேண்டும். இந்த வேண்டுகோளை தாங்களை ஏற்று அருள வேண்டும் என்று கேட்டார் சனி.

சிவபெருமான் சனியினுடைய அத்தனை கோரிக்கைகளையும் அப்படியே ஏற்றுக் கொண்டார். அன்று முதல் சனிபகவான் சர்வ வல்லமை பொருந்திய சனீஸ்வரர் என்ற பெயர் பெற்றார்.

சர்வேஸ்வரன் என்ற பெயரைப் பெற்றுவிட்டால் போதுமா நவகிரகங்களில் தான் தான் அதிக பலத்துடன் இருக்க வேண்டும். தன் பார்வைபட்டால் அவர்கள் எல்லா பலமும் இழந்து விட வேண்டும் என்று சனீஸ்வரர் விரும்பினார்.

சிவபெருமான் இதனையும் ஏற்றுக் கொண்டார். அன்று முதல் இன்றுவரை நவகிரகங்களில் அதிக பலமுள்ளதாக வியாபித்து இந்த பூலோகத்தையும் மேலோகத்தையும் ஆட்டிப்படைத்து வருகிறவர் தான் நமது சனிபகவான்.

## சனீஸ்வரரின் பார்வையும், பலனும்

சனிபகவான் பார்வைபட்டால் சர்வமும் நாசம் என்று சொன்னாலும் சனிபகவான் பார்வை கெடுதல் புத்தியுடையவர்கள் மேல்பட்டால் நிறைய நன்மையும் நடக்கும் என்று நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

உதாரணமாக சனிபகவான் உருவத்தில் வந்து நம்மை கெடுத்துக் கொண்டிருப்போரைக் கண்டு நாம் துன்பப்படுகிறோம் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது நாம் என்ன செய்ய வேண்டுமென்றால், உண்மையில் சனி மகாதசையே, ஏழரை ஆண்டுச் சனியோ அல்லது சனிபகவானின் இரு பிரதிநிதிகளாகச் செயல்படும் இராகு மகாதசையோ அல்லது கேது மகாதசையோ நடந்து கொண்டிருந்தால் இது சனிபகவானின் தூண்டுதல் என்பதை கண்டு அவரை நோக்கி அவருக்குப் பிரியமான பிரார்த்தனைகளை பரிகாரங்களைச் செய்து கொண்டே வர வேண்டும்.

நமது பிரார்த்தனைகள் அல்லது பரிகாரங்களினால் சனி பகவான் மகிழ்வடைந்தால், உடனே நம்மீது பட்ட அவரது பார்வையை நமக்கு எதிராகச் செயல்பட்டவர் மீது வைத்து விடுவார்.

அப்புறம் என்ன ஆகும்? என்பதை நீங்கள் யோசித்துப் பார்க்கலாம். நம்மைக் கெடுக்க நினைத்தவர் பலமிழந்து. மூலையில் போய் அமர்வார். இது நிச்சயம். ஆகவே சனிபகவான் பார்வை நம்மீது படாதவாறு நாம் பிரார்த்தனை செய்து கொள்வதுதான் சிறந்த யுக்தி.

## மாந்தி – குளிகன்

நவகிரகங்களில் சனி அதிகபலம் பெற்று திகழ்கிறார் என்று சொன்னேன் அல்லவா, அதற்குமுன் உதாரணமாக இன்னொன்றையும் இங்கே குறிப்பிடுவது மிகவும் அவசியம் என கருதுகிறேன். ஏற்கனவே இராகு காலம், எமகண்டம் என்ற இரண்டைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தது நினைவிருக்கலாம்.

சனிபகவானுடைய மைந்தன் என்று கருதப்படுபவர் மாந்தி எனப்படுபவர். இவரைப் பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாக கணக்கிடுவார்கள். அந்த மாந்தியின் மறு உருவந்தான் குளிகன் என்று அழைக்கப்படுவர். குளிகன் கூட சனீஸ்வரருடைய அத்தனை

குணநலன்களைப் பெற்றிருப்பவர். யமனுடைய பெர்சனல் செகரட்டரி என்றும் தைரியமாக குறிப்பிடலாம். இவருடைய நேரத்தில் கூட எந்தவித சுபகாரியங்களையும் விலக்கி வைப்பது நல்லது. ஏனெனில் குளிகை நேரத்தில், விஷ கிரணங்கள் இந்த பூலோகத்தில் பலமாக வீசும் என்று ஒரு குறிப்பு உண்டு.

## சனி பகவானது தோற்றம்

சனீஸ்வரருடைய வரலாற்றை, ஓரளவு சுருக்கமாக நாம் இதற்கு முன்பு பார்த்தோம். சனீஸ்வரருக்கு நீலாம்பர மலர் என்றால் கொள்ளை ஆசை. கருப்பு சந்தனத்தை மார்பில் பூசிக் கொள்வதில் மிகவும் விருப்பமுள்ளவர். தன் மனைவி நீலாவை ஒரு பொழுதும் விட்டுப் பிரியாதவர். அவருடைய கண்கள், மற்றவர்களின் கண்களை விட வித்தியாசமானவை. குழிவிழுந்த கண்களைப் பெற்றவர்.

இருந்தாலும் தன்னைச் சரண அடைந்தோரைக் காப்பதில் மிகவும் கெட்டிக்காரர். பரிபூர்ண ப்ராத்தனையால் சனீஸ்வரர் குளிர்ந்து போவதால், பிரார்த்தனைகளை தொடர்ந்து செய்து கொண்டே வர வேண்டும். ஆனால் உடனே பலனை எதிர்பார்க்க முடியாது. சிவபெருமான் மீது சனீஸ்வரருக்கு அளவு கடந்த பக்தி உண்டு. அதனால் தான் இன்றைக்கும் சகல சிவாலயங்களில் சனி பிரதோஷ காலம் மிகவும் விசேஷமாகக் கருதப்படுகிறது.

## சூரியனுக்கும் உதவுகிறார் சனீஸ்வரர்

சனீஸ்வரர் சூரியனுக்கு மைந்தன் என்றாலும் சூரியனோடு பகை கொண்டு வாழ்பவர் என்பதால் சூரியன் கொடுமையாக செயல்பட்டால், சனீஸ்வரரை நம்பி தியானம் செய்தால் சூரியனது கொடுமையான செயல்களிலிருந்து எந்தவிதக் காயமும் படாமல் தப்பலாம் என்று ஒரு வழக்கு உண்டு.

உண்மையில் சனீஸ்வரர் சூரியனுக்கு விரோதி அல்ல என்பதற்கு இராவண சரித்திரத்தில் கதையொன்று உண்டு.

இராவணேஸ்வரன், மகாபராக்கிரமம் கொண்டவன். நவகோள்கள் அனைத்தையும் தன் கால்களுக்கு கீழே போட்டு மிதித்தவன். அவர்களுள் சனீஸ்வரனும் அடங்குவார். அப்பொழுது சனீஸ்வரருக்கு ஒன்று தோன்றியது.

தான் இராவனேஸ்வரனது கட்டுப்பாட்டிற்குள் இருப்பது பற்றிக் கூடப் பரவாயில்லை. ஆனால் தன் தந்தையான சூரியன் கூட இராவணேஸ்வரனால் மிதிபட்டு அடங்கி இருக்கிறாரே. இது என்ன நியாயம் ?

தந்தைக்கும் தனக்கும் என்னதான் மனக்கசப்பு இருந்தாலும் தன் தந்தை மானுடனான இராவணனிடத்தில் அடிமைப்பட்டு கிடப்பதா தன் தந்தையைக் காப்பாற்ற வேண்டியது தனது கடமையன்றோ என்று சனீஸ்வரன் பொருமினார்.

இதற்கு என்ன செய்யலாம் என்று சனீஸ்வரர் துடிதுடித்துக் கொண்டிருக்கும் போது இராவணனுக்கு கெட்ட புத்தி வந்தது.

யார் சொல்வதையும் கேட்காமல் சனீஸ்வரன் பார்வைபட்டால் தனக்கு ஒன்றும் ஆகாது என்ற திமிறினால் மற்ற கிரகங்களை குப்புறப்படுக்க வைத்துவிட்டு சனீஸ்வரனை மாத்திரம் தன்மீது பார்வைபடும்படி திருப்பினான் இராவணேஸ்வரன்.

தன் தந்தையைக் காப்பாற்ற தக்க தருணம் இதுதான் என்றெண்ணி சனீஸ்வரன் தன் பரிபூரணமான கண்களோடு பார்க்க இராவணேஸ்வரன் தன் அத்தனை பலத்தையும் இழந்தான். சூரியன் உட்பட அத்தனை கோள்களும் இராவணனது கொடுமையிலிருந்து மீண்டனர் என்று சொல்வதுண்டு. இதிலிருந்து நமக்கு என்ன தெரிகிறது என்றால் சூரிய கிரகத்தினால் சூரிய மகாதசையினால் அல்லது சூரிய அந்தரத்தினால் யார் ஒருவர் வாழ்க்கையில் துன்பப்படுகிறாரோ அவர்கள் சூரியனை வேண்டுவதற்கு பதிலாக சனீஸ்வரரை வேண்டினால் சூரிய மகாதசையின் கடுமையான தொந்தரவிலிருந்து தப்பலாம் என்பது தான்.

## சந்திரனும் – சனீஸ்வரனும்

சனிபகவானுக்கும் சந்திரனுக்கும் கூட அவ்வளவாக ஒத்தவராது என்ற நியதி உண்டு. இதற்கு உதாரணமாக இதிகாசத்தில் சொல்லப்பட்ட ஒரு கதையை மிகவும் சுருக்கி வாசகர்கள் முன் வைக்கிறேன்.

சனிபகவான் ஒவ்வொரு இராசியாக சஞ்சரித்து வரும் வேளையில் கார்த்திகை நட்சத்திரத்தை விட்டு சந்திரனது

நட்சத்திரமான ரோகிணிக்குள் கால் எடுத்து வைக்கும் பொழுது இயற்கை வளம் கெட்டு மழை பொழியாது. பஞ்சத்தால் நாடு பீடிக்கும் தொடர்ந்து பல ஆண்டுகள் நாடு இப்படியே துன்பத்தில் வாடும் என்று தசரத மகாராஜாவிடம் அப்பொழுது ஜோதிட விற்பன்னர்கள் ஆரூடம் கூறினார்கள்.

இதைக்கேட்டு தசரத மகாராஜா கலங்கிப் போனார். நாட்டிற்கு ஏற்படப்போகும் இந்த துன்பத்தை நீக்க வழியே இல்லையா என்று துடிதுடித்து உலகத்திலுள்ள எல்லா முனிவர்களையும் வரவழைத்து ஆலோசனை கேட்டார்.

கடைசியாக வசிஷ்டர் சொன்ன ஆலோசனைதான் தசரத மகாராஜாவுக்கு உன்னதம் என்று தெரிந்தது. வசிஷ்டர் என்ன சொன்னார் தெரியுமா ? நாட்டில் சனிபகவானால் சகடபேதம் என்னும் கொடிய துன்பம் வருவது நிச்சயம். இதைத் தவிர்க்க தசரதன் சனிபகவானை தரிசித்து அவரது பூரண அனுகிரகத்தைப் பெற்றால் நாட்டிற்கு வரப்போகும் பஞ்சம் பிணி நோய்களைத் தீர்க்கலாம்.

## தசரத மகாராஜா

இதைக் கேட்டதுதான் தாமதம் தசரத மகாராஜா சனீஸ்வாரின் அனுக்கிரகத்தை வேண்டி நின்றார் சனீஸ்வரரும் தசரத மகாராஜாவின் வேண்டுகோளை ஏற்று நான் எந்த கெடுதலான பார்வையும் உங்கள் நாட்டின் மீதோ உங்கள் மக்களின் மீதோ வீசி சகடபதேம் என்னும் பஞ்சத்தை உண்டாக்க மாட்டேன். ஆனால் இதற்கு நீங்கள் ஒரு காரியம் செய்ய வேண்டும். வரும் பன்னிரண்டு ஆண்டுகளில் தினமும் என்னை நினைத்து எனக்கு விருப்பமான ஸ்திர வாரமான சனிக்கிழமைதோறும் சுத்தமான எள் எண்ணெயினால் விளக்கேற்றி கறுப்பு வஸ்திரமானது எள்ளு சாதத்தை கலந்து காக்காய்களுக்கும் ஏழை எளியோர்களுக்கும் தான தர்மம் செய்ய வேண்டும். இதை ஒரு சனிக்கிழமை கூட விடாது செய்து வர வேண்டும். இதில் என்றைக்காவது தவறு செய்தால் பின்னர் அதன் பலனை தாங்களும் தங்களைச் சார்ந்தவர்களும் கண்டிப்பாக அனுபவிக்க நேரிடும் என்று சொன்னார்.

தசரத மகாராஜா சனீஸ்வரனுடைய வேண்டுகோளை ஏற்றார். இதன் காரணமாக சகடபேதம் என்னும் கொடுமையான சூழ்நிலையை சந்தோஷமான சூழ்நிலைக்கு மாற்றி விட்டார்.

## சூரிய குலமே சனீஸ்வரரரை தரிசித்தது

இதில் ஊன்றிக் கவனித்தால் ஒரு உண்மை விளங்கும். அதாவது சூரிய வழித்தோன்றல் தான் தசரத மகாராஜா. அந்த சூரிய குல வம்சத்தின் பிரதிநிதியான தசரத மகாராஜா சனீஸ்வரனை வேண்டி காரியத்தில் வெற்றி பெற்றார் என்பதால் சூரிய வம்சம் செழிக்கவே சனிபகவான் அனுக்கிரகம் செய்திருக்கிறார் என்பது தெரிகிறதவல்லா ?

## ஆஞ்சநேயரும் சனீஸ்வரரும்

சனீஸ்வரரும் குச்சனூர் என்னும் திவ்விய சரித்திரப் பூமியில் நின்று தினமும் பக்தர்களுக்கு அனுக்கிரகம் கொடுத்து வந்தாலும் ஒருவருக்கு ஏழரைச் சனியோ அல்லது அஷ்டமத்து சனியோ ஜாதகத்தில் காணப்பட்டால் உடனே ஜோதிட விற்பன்னர்கள் சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயரை வலம் வந்தால் சனிபகவானது கொடுமையான பார்வை குறையும். சுபிட்சம் ஏற்படும் என்று சொல்வதைக் கேட்டிருக்கிறோம்.

அப்படி என்ன விசேஷமான சக்தி ஆஞ்சநேயரிடம் இருக்கிறது ? என்று கேள்வி எழலாம். அதற்கும் காரணம் இருக்கிறது சர்வேஸ்வரரான சிவபெருமான்தான் சனிபகவானுக்கு மிகவும் உயர்ந்த உன்னத பதவியான ஈஸ்வரன் பட்டத்தை அளித்தாரல்லவா ? அப்படிப்பட்ட சிவபெருமான் மீது எல்லையற்ற பாசமும் மரியாதையும் சனீஸ்வரருக்கு இருந்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

அந்த சிவபெருமானின் சொரூபம் தான் ஆஞ்சநேயர் என்பது நிறைய பேருக்கு தெரிந்திருக்கும். அந்த ஆஞ்சநேயர் மூலம் நட்சத்திரத்தில் தோன்றியவர். அதுவும் மாதங்களில் நான் மார்கழியாக இருக்கிறேன் என்று பகவான் கிருஷ்ணன் திருவாய் மலர்ந்தருளிய மார்கழி மாதத்தில் பிறந்தவர்.

## ஜோதிட சாஸ்திரப்படி

ஜோதிட சாஸ்திரப்படி பார்த்தால் தனுசு இராசியில் சூரியனும் சந்திரனும் இருக்கின்ற புனித வேளையில் ஆஞ்சநேயர் திரு அவதாரம் எடுத்தார். தனுசு இராசி என்பது குருபகவானுடைய வீடு. குருவீட்டில் சந்திரன் இருந்தால் குருசந்திரயோகம், சூரியனும் சந்திரனும் குருவின் வீட்டில் என்றால் உலகத்திற்கெல்லாம் ஒளியைத் தரும் சூரியனும் சந்திரனும் கண்களைப் போன்றவர்கள். அப்படிப்பட்ட சூரிய சந்திரர்கள் ஒன்றாகக் கூடும் குருபகவானுடைய வீட்டில் பிறந்தவர் தான் ஆஞ்சநேயர்.

## ஆஞ்சநேயரை சனிபகவான் பிடித்த கதை

ஆஞ்சநேயருக்கு மூலம் நட்சத்திரம் என்பதால் சனி பகவான் ஆஞ்சநேயரையும் கண்டிப்பாக பிடிக்கத்தானே வேண்டும். எனவே சனிபகவான் மூலநட்சத்திரமான ஆஞ்சநேயரைப் பிடிக்க வந்தார்.

அப்பொழுது இராம அவதாரம் முடிந்து கிருஷ்ண அவதாரம் நடந்து கொண்டிருந்த காலம். ஆஞ்சநேயர் சிரஞ்சீவியாக இருந்தார். இவரது தினசரி கடமைகளுள் ஒன்று. தோட்டத்தில் மலர்ந்த பூக்களைப் பறித்து இராமருக்கு சாற்றி பஜனைப் பாடல்களைப் பக்தியுடன் மெய்மறந்து பாடுவது.

அன்றைக்கும் ஆஞ்சநேயர் வழக்கம் போல் பூ பறிக்க தோட்டத்திற்கு கிளம்பிக் கொண்டிருந்தார். அப்போது அவர் முன்பு வந்த பகவான் கிருஷ்ணரின் மனைவியான ராதா ஆஞ்சநேயரிடம் ஆஞ்சநேயா இன்றிலிருந்து நீ பூப்பறிக்க வெளியே செல்ல வேண்டாம் உனக்கு வேண்டி புஷ்பங்களை நானே பறித்துத் தருகிறேன் என்று சொன்னாள்.

ஆஞ்சநேயருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. எதற்காக ராதா தன்னைத் தோட்டத்திற்கு போக வேண்டாம் என்று சொல்கிறார்கள் என்று குழம்பிப் போனார். ஆஞ்சநேயரின் குழப்பத்தைக் கண்ட ராதா ஆஞ்சநேயா நீ ஏன் குழம்பி நிற்கிறாய் என்பது எனக்குத் தெரியும். காரணம் இது தான் உனக்கு இன்று முதல் ஏழரை ஆண்டுச்சனி பிடிக்கப் போகிறது. உன்னைப் பிடிக்க சனீஸ்வரர் வாசலில் காத்துக் கொண்டிருக்கிறார். அதனால் தான் நீ வெளியே போக வேண்டாம் என்று சொன்னேன் என்றார்.

ஆஞ்சநேயர் இதைக்கேட்டு சிரித்தார். பின்னர் அம்மணி எனக்கு ஏழரைச் சனி பிடித்தால் பிடிக்கட்டும். அதற்காக நான் அஞ்சேன். சனீஸ்வரர் தன் கடமையைச் செய்யட்டும். நான் என் கடமையைச் செய்கிறேன் என்று சொன்னார்.

இல்லை ஆஞ்சநேயா சனீஸ்வரர் உன்னைப் பிடித்தால் நீ பல்வேறு இன்னல்களுக்கு ஆளாவாய் நான் சொல்வதைக் கேள் என்றாள் ராதா அம்மையார் மறுபடியும்.

பரவாயில்லை தாயே என்னைத் தடுக்காதீர் நான் தோட்டத்திற்கு செல்ல தாங்கள் அனுமதி தாருங்கள் என்றார்.

ராதாவால் ஒன்றும் சொல்லவும் முடியவில்லை விழுங்கவும் முடியவில்லை. ஆஞ்சநேயர் அதிபராக்கிராமசாலியாயிற்றே என்று விட்டுவிட்டாள்.

என்னதான் பராக்கிரமசாலியாக இருந்தாலும் சனீஸ்வரன் முன்னால் மற்றவர்கள் எம்மாத்திரம் இதை ஆஞ்சநேயர் சட்டென்று உணர்ந்து கொண்டார். மாளிகையை விட்டு வெளியே வரும்பொழுது புத்திசாலித்தனமாக தன் வாலின் நுனியை நீட்டினார்.

## ஆஞ்சநேயரின் வாலில் சனீஸ்வரன்

ஆஞ்சநேயரின் வாலைக் கண்டதும் காத்திருந்த சனிபகவான் சற்றும் தாமதிக்காமல் வாலில் ஏறி அமர்ந்தார். சனீஸ்வரன் தன்னைப் பிடித்துக் கொண்டார் என்பதைக் கண்டதும் ஆஞ்சநேயருக்கு அடுத்த கணம் சனீஸ்வரனை எப்படி விரட்டி அடிப்பது என்று யோசனை வந்தது. அவ்வளவுதான் இதுவரை தான் அமைதியாக அமர்ந்து பகவான் ஸ்ரீராமபிரானை துதித்து வந்தது போதும் இனிமேல் தினமும் துள்ளிக்குதித்து கொண்டே ஸ்ரீராமனை பஜனை செய்ய வேண்டும் என்று ஆஞ்சநேயர் முடிவு செய்தார். அதன்படியே குதிக்கலானார். அவரது வாலின் நுனியில் உட்கார்ந்து கொண்டிருந்த சனிபகவானுக்கு உடம்பெல்லாம் வலி எடுக்க ஆரம்பித்தது.

ஆஞ்சநேயர் குதிப்பதை நிறுத்தட்டும் அப்புறம் ஒரு பிடி பிடிக்கலாம் என்று சனீஸ்வரர் நினைத்ததுதான் உண்மை. ஆனால் நாட்கள் ஓடிக்கொண்டிருந்தது. ஆஞ்சநேயர் கொஞ்சங்கூட குதிப்பதை நிறுத்தவில்லை.

எப்பொழுதும் ஆஞ்சநேயர் குதிப்பதை நிறுத்தப் போகிறார் என்ற சந்தேகம் வரவே சனிபகவான் உடல் வலியின் காரணமாக இனியும் தாமதிப்பதில் பலனில்லை என்று உணர்ந்தார். உடனே ஆஞ்சநேயரை அழைத்தார் சனீஸ்வரன்.

அப்பா ஆஞ்சநேயா நீ எப்பொழுது குதிப்பதை நிறுத்தப் போகிறாய் என்று ஈனஸ்வரத்தில் கேட்டார். இன்னும் ஏழரை வருஷத்திற்கு இப்படியே தான் குதித்து கொண்டே இருக்கப் போகிறேன் என்றார் சிவபெருமான் சொரூபமான ஆஞ்சநேயர் இதைக் கேட்டதும் சனீஸ்வரருக்கு வயிற்றைக் கலக்கியது. எனவே யோசிக்கலானார்.

## சனீஸ்வரர் – ஆஞ்சநேயரை விட்டு விலகியது

இனிமேல் நாம் ஆஞ்சநேயரைப் பிடித்துக் கொண்டிருப்பதில் அர்த்தமே இல்லை. எனவே நாம் நம் நலனைப் பார்க்க வேண்டுமானால் உடனடியாக ஆஞ்சநேயரை விட்டு விலகிவிடுவது தான் உத்தமம் என்று முடிவெடுத்தார். தன் முடிவை ஆஞ்சநேயரிடம் சொல்லி அவர் அனுமதியோடு வெளியேறினார்.

சனீஸ்வரன் தன்னை விட்டு வெளியேறுவதைக் கண்ட ஆஞ்சநேயர் சனீஸ்வரனை அழைத்து நீ இப்பொழுது என்னை விட்டு வெளியேறுவது போல் யார் என்னை ஏழரை ஆண்டுச் சனியின் பொழுதும் அஷ்டமச் சனியின் பொழுதும் உன்னிடத்திலிருந்து விடைபெற வழிபடுகிறார்களோ அவர்களுக்கும் நீ தொந்தரவு கொடுக்காமல் விலகிவிட வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். ஆஞ்சநேயரின் இந்த வேண்டுகோளை சனீஸ்வரனும் உடனடியாக ஏற்றுக் கொண்டார். எனவே தான் ஏழரை சனியானாலும் அஷ்டமச் சனி ஆனாலும் சனி மகாதசையை ஆரம்பிப்பது என்று தெரிந்தால் அவர்களது குடும்ப சுமை அனைத்தும் உடனடியாகத் தீர ஆஞ்சநேயரை கண்டிப்பாக வழிபட வேண்டும். ஆஞ்சநேயர் பக்தர்களின் வேண்டுகோளை ஏற்று நிச்சயம் சனிபகவானிடமிருந்து விடைபெற்றுத் தருவார் என்ற இந்த கருத்தினை வாசகர்கள் ஒரு மனதுடன் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய முக்கிய நிகழ்ச்சிதான்.

## குச்சனூர் ஸ்ரீசனீஸ்வரபகவான் கோயில்

சனீஸ்வரபகவான் தலநாயகனாக, முதல்மூர்த்தியாக மற்ற கிரகங்களோடு இணைந்து இல்லாமல் தனித்தெய்வமாக கோவில் கொண்டிருப்பது குச்சனூர் ஒன்றேயாகும். வேறு எங்குமேயில்லை. சில தலங்களில் தனியாக இருந்தாலும் அங்கு உபசந்நிதியாகவேயுள்ளது. ஆகையால் சனீஸ்வரபகவானுக்கு குச்சனூரான் என்ற பெயரும் வழங்கப்படுகிறது. செண்பகநல்லூர் என்று அழைக்கப்பட்ட பழமையான இவ்வூர் சிறந்த திருத்தலமாகும்.

இவ்வூர் பாண்டிய நாட்டில் மதுரை மாவட்டம் சின்னமனூர் ஊராட்சி ஒன்றியத்தில் அமைந்துள்ளது. கம்பம் பள்ளத்தாக்கில் தற்போது முல்லைப் பெரியாறு என்ற பெயரில் ஒடுவதும் சுரபி நதி என்னும் பழம் பெருமையுடையதுமான சுருளி நதி ராஜாவாய்க்காலின் மேற்குக் கரையருகில் அமைந்துள்ளது இத்திருக்கோவில். கோயிலைச் சுற்றிச் சுற்றி சோலைகளும் அருகில் வாய்க்கால்களும் வாய்க்காலை ஒட்டி வயல்களும் நிறைந்து இருப்பதால் இயற்கை அன்னையின் இன்பக் காட்சியை இங்கு காணலாம். சுரபி நதியை சிவகங்கையென்றும் பாராட்டிக் கூறுவர்.

## கோவில் தோன்றிய வரலாறு

மணிநகரைத் தலைநகராகக் கொண்டு தினகரன் என்னும் மன்னன் குலிங்க நாட்டை ஆண்டு வந்தான். இவனை சனிபகவான் ஏழரை ஆண்டுகள் பற்றி வருத்துவதாக இருந்ததை மகன் சந்திரவதனன் சோதிடர் மூலமாக அறிந்தான். சற்றுத் தூரத்திலுள்ள வனத்திற்கு சென்று செண்பகம், கொங்கு முதலிய மரங்கள் அடர்ந்த சோலையில் சுரபி நதிக்கரையில் அமர்ந்து சனிபகவானைப் போல் இரும்பால் உருவம் அமைத்து மனஉறுதியோடு வழிபட்டு வந்தான் தன்னை ஆழ்ந்த பக்தியோடு வழிபட்ட சந்திரவதனனுக்கு சனிபகவான் அருள் பாலித்த இடமே குச்சனூரில் சனீஸ்வரபகவான் கோவில் கொண்டுள்ள இடமாகும். இந்நூலின் கண் உள்ள தினகரன் மான்மியம் என்னும் நூலைப் படிப்பவர், சந்திரவதனனின் பக்தி மகிமையையும் இக்குச்சனூர் கோவிலின் புராண வரலாற்றையும் முழுமையாகவும் தெளிவாகவும் புரிந்து கொள்வர்.

## மூலஸ்தானம்

மூலஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கும் மூலவர் சுயம்புவாகத் தோன்றியவர். லிங்க வடிவில் சற்று அகன்றுள்ள இவரது தோற்றம் காண்போர் மனதைக் கவரும் தன்மையுடையது. சனிபகவானுக்குரிய கருமையும் அழகும் கொண்டது. மூலவருக்கருகில் உற்சவ மூர்த்தி அமைந்துள்ளார். ஆண்டுக்கொரு முறை பவனி வருபவர் உற்சவ மூர்த்தியேயாவர்.

உபசன்னிதிகள் சனீஸ்வரபகவான் எழுந்தருளியுள்ள மண்டபத்தையொட்டி வலப்புறமாக சுப்பிரமணிய சுவாமி கோவிலும், அதையடுத்து விநாயகப் பெருமான் கோவிலும் அமைந்துள்ளன. இடப்புறமாக லாட சன்னியாசியின் கோயில் உள்ளது. சனிபகவான் கோவிலுக்கு சற்று தூரத்தில் வாய்க்கால் கரையில் சோணைக்கருப்பண சுவாமியின் ஆலயம் உள்ளது. அதன் பக்கத்தில் கன்னிமார் கோவிலும், நாகர்கோவிலும் உள்ளது.

ஸ்ரீவிநாயகர், ஸ்ரீ சுப்பிரமணியர் சனீஸ்வரபகவானைத் தரிசிக்க வரும் அன்பர்கள் மூலப் பொருளாகிய விநாயகப் பெருமானையும் குறிஞ்சி நிலக்கடவுளாகிய முருகப் பெருமானையும் தரிசிக்கட்டும் என்று கருதி அத்தெய்வங்களையும் இங்கு எழுந்தருளச் செய்துள்ளனர்.

ஸ்ரீ லாட சன்னியாசி பாண்டிய நாட்டு எல்லைக்குள் குச்சனூரில் எழுந்தருளியுள்ள சனிபகவானை சேர நாட்டைச் சேர்ந்த லாட சன்னியாசி என்னும் பகவான் பக்தர் தன் நாட்டிற்குக் கொண்ட செல்ல விரும்பினார். ஆழ்ந்த பக்தியோடு பூசித்து நோன்பு நோற்று வந்தார். குச்சனூரிலேயே நிலைத்திருக்க விரும்பிய சனிபகவான் தம் உண்மைத் தொண்டராகிய லாட சன்னியாசியை இங்கே இருத்தி தம் திருவடிக் கமலங்களில் ஐக்கியமடையச் செய்து துணைத் தெய்வங்களுள் ஒன்றாக அமைத்துக் கொண்டார். சனீஸ்வரபகவான் விரும்பி குடி கொண்டிருக்கும் இத்தலத்தின் பெருமையே பெருமை. ஸ்ரீ லாட சந்நியாசியின் பக்தியே பக்தி. அவருக்கும் இப்போது முக்கிய நாட்களில் பூஜை நடக்கிறது.

ஸ்ரீசோனைக் கருப்பணசாமி சனீஸ்வரபகவானின் முன்னோடித் தெய்வமாக காவற்கடவுளாக காட்சியளிப்பவர் அவரை சோணை முத்தையா என்றும் அழைப்பர். அவரை மனமுருகி வழிபடும் அன்பர்களுக்கு வேண்டியது வேண்டியவாறு கிட்டும். தம்மை நம்பி வணங்கும் பக்தர்களின் கவலையைப் போக்கி மகிழ்வூட்டும் கண்கண்ட தெய்வம் அவர் வெள்ளைக் குதிரை மீது கம்பீரமாக வீற்றிருக்கும் கருப்பணசாமி தம் தொண்டர்களின் உடமைகளைப் காப்பதற்கு ஊர்க்காவலனைப் போல இரவில் பவனி வருவார் என்று கூறுவர். அவருக்கு ஆட்டுக்கறியும் சாராயமும் பிரியமானவை. இன்றும் விழாக்காலங்களில் இரவில் அவருக்கு உரிய இடத்தில் சாராயம் ஊற்றி வழிபடும் வழக்கம் உள்ளது.

## தீர்த்தம்

ஒரு கோவிலின் சிறப்புக்கு மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் முக்கியமானவை. இங்கு சனீஸ்வரபகவான் கோவிலுக்கு ராஜவாய்க்காலே இதன் தீர்த்தமாகும். இது ஒரு பழமையான நதி முன்பாக ஓடிக் கொண்டிருக்கும் சுரபி நதி என்று புகழ் பெற்ற சுருளி நதி. இதில் வருடம் 365 நாட்களும் தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கும் நாள்தோறும் பகவானைத் தரிசிக்க நூற்றுக்கணக்கான பக்தர்கள் வருவார்கள். இவர்கள் இந்த வாய்க்காலில் நீராடி மனநிறைவு பெற்ற பின்பே பகவானைத் தரிசிப்பார்கள். எக்காலமும் இதில் நீர் ஓடுவதால் பக்தர்களுக்கு இது ஒரு ஜீவநதியாகத் திகழ்கிறது. பெரியாறு நீர்த்தேக்கம் அமைந்த பிறகு முல்லை பெரியாற்றை இந்த நதியோடு கலக்கும்படி செய்தனர். அதனால் இந்த வாய்க்கால் தற்போது அந்தப் பெரியாற்றிலிருந்து பிரிந்து வருகிறது.

## தலவிருட்சம்

சனிபகவான் ஒரு காலத்தில் நிடத நாட்டை ஆண்ட நளச்சக்கரவர்த்தியையும் குலிங்க நாட்டு மன்னன் தினகரனையும் மற்றும் பல தேவர்களையும் ஊழ்வினையின் காரணமாக தொடர்ந்து பின்பு நற்பேறளித்த செய்திகளை நூல்களில் படிக்கக் காணலாம். சில சமயங்களில் நல்லவர்களையும் பற்றுவதற்கு பூர்வவினை காரணமாக இருந்த போதிலும் தமக்கு பாவம் உண்டென்று கருதி அப்பாவம் நீங்குதற்பொருட்டு ஈஸ்வரன் கட்டளைப்படி விடத்தலை மரத்தடியில் தியானத்தில் அமர்ந்து மனநிறைவு பெற்று மகிழ்வுடன் வீற்றிருக்கும் இடம் இத்திருத்தலமாகும். இப்போதும் இம்மரம் மூலஸ்தானத்திற்கு

பின்னால் செழிப்பாக இருப்பதைக் காணலாம். உலக வாழ்க்கையிலும் பெரியோரை ஒரு காரியமாக அணுகும்போது அவர் மகிழ்ச்சியோடிருக்கும் சமயம் நாடினால் சென்ற காரியம் எளிதில் நிறைவேறுவதைக் காண்கிறோம். அதுபோல விடத்தலை மரத்தடியில் பகவான் மகிழ்ச்சியோடு வீற்றிருக்கும் இத்தலத்தை நாடி தம் குறைகளை கூறி இறைஞ்சினால் அவை நிவர்த்தியாக நல்ல பயன்கிட்டும் என்பதற்கையமில்லை.

## பூசனை நிகழ்ச்சி

விடியற்காலம், உச்சிகாலம், சாயங்காலம் ஆகிய மூன்று வேலைகளிலும் நாள்தோறும் தவறாமல் பூஜை நடைபெறும் ஆகமமுறைப்படி தூபதீபதளிகைகளுடன் அர்ச்சனை முதலியனவும் நடைபெறும். உச்சிக்கால பூஜையானவுடன் சனீஸ்வரபகவானின் வாகனமாகிய காகத்திற்கு தளிகை அளித்த பின்னரே பிரசாதம் பக்தர்களுக்கு வழங்கப்படும். சிலசமயங்களில் காகம் தளிகை ஏற்காவிடில் அப்படியே அன்றைய நிகழ்ச்சிகளை நிறுத்தி வைத்து பக்தர்களும், பூசாரிமார்களும் பகவான் சன்னிதானத்தில் தாள் பணிந்து தங்கள் குற்றங்களுக்கு மன்னிப்பு வேண்டி மன்றாடிய பின் காகம் தளிகை ஏற்க வருவது இன்றும் நடைபெறும் அதிசயங்களுள் ஒன்றாகும். பகவானுக்குப் பிரியமானது எள் ஆகையால் இக்கோவிலில் எள் பொங்கல் படைப்பது சிறந்ததாகும். ஏனைய பொங்கலுடன் எள் பொங்கல் படைப்பதைப் பெரும்பாலும் காணலாம்.

## திருவிழாக்கள்

ஒவ்வொரு வருடமும், ஆடிமாதம் நடைபெறும் திருவிழா முக்கியமானது. ஆடிமாதம் சனிக்கிழமை தோறும் திருவிழா நடைபெறும். சுற்றுப்புறத்து மக்கள் மட்டுமல்ல வெகுதூரத்திலிருந்து பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்து சனீஸ்வர பகவானைத் தரிசித்து செல்லும் காட்சி கண்கொள்ள காட்சியாகும். ஐந்து சனிக்கிழமைகளிலும் மூன்றாம் சனிக்கிழமையே மிகவும் விசேடமானது. அன்றுதான் திருவிழாவின் உச்சகட்டம் என்று சொல்லலாம். ஆண்டுதோறும் ஆடிமாதம் முதல் சனிக்கிழமையன்று கலிப்பணம் கழித்து சுத்த நீர் தெளித்து காகம் பொறித்த கொடியேற்றத்துடன் விழா துவங்குகிறது. அன்றைய தினம் குச்சனூருக்கு கீழ்ப்புறமுள்ள பூலானந்தபுரம் கம்பளத்தார் கோடாங்கி நாயக்கர் வகையறாவினரால் பரம்பரையாகச் செய்யப்பட்டு வந்த

சாஸ்திர சடங்குகள் செய்ய விழா ஆரம்பமாகிறது. மூன்றாம் சனிக்கிழமையன்று பகவான் திருக்கல்யாணமும் அடுத்த நாள் அதாவது மூன்றாம் சனிக்கிழமை இரவு சக்தி கரகம் எடுத்தல், மஞ்சனக் காப்புச் சாற்றுதல் முதலிய விசேட நிகழ்ச்சிகளுடன் பெருந்திருவிழா நடைபெறும். மறுதினம் ஞாயிற்றுக்கிழமை இரவு உற்சவர் சர்வ அலங்காரத்தோடு இரதத்தில் பவனி வருவார். அதற்கடுத்த நாள் திங்கட்கிழமை ஸ்ரீலாட சந்நியாசி பூஜையும், மஞ்சள் நீராட்டமும் நிகழும். நாலாவது சனிக்கிழமை திருவிழாவிற்குப் பின்வரும் திங்கட்கிழமையன்று அருள்மிகு சோணைக்கருப்பணசாமி பொங்கல் சிறப்பு பூஜை முதலியன பெருமிதமாக விளங்கும்.

## சனிப்பெயர்ச்சி

ஒவ்வொரு சனிப்பெயர்ச்சியின் போதும் இடைக்காலத் திருவிழா நடைபெறும். பெயர்ச்சி நேரத்தில் விசேட அலங்காரத்தோடு பகவானுக்கு பூஜை நடத்தப்படும். இரண்டரை ஆண்டுகளுக்கு ஒருமுறை ஸ்ரீசனிஸ்வரபகவான் ஒரு ராசியிலிருந்து அடுத்த ராசிக்குப் பிரவேசிப்பது சனிப்பெயர்ச்சி எனப்படும்.

## சனிப்பெயர்ச்சியின் பலன்

ஒருவருக்கு சந்திரனும், சனியும் ஒரே வீட்டில் இருந்தாலும் சந்திரனுக்கு 2,4,5,7,8,10,12 ஆகிய இடங்களில் சனி இருந்தாலும் நல்ல பலன்களைத் தராது. சந்திரனுக்கு 3,6,9,11 ஆகிய இடங்களில் சனியிருந்தால் தீய பலன்களைத் தராது நன்மை செய்யும்.

ஒருவர் சன்னராசிக்கு 12, 1,2–ல் சனி முன்னும் பின்னும் வருவதை ஏழரை நாடு என்பது வழக்கம். முதலில் வரும் ஏழரை நாடு அதிக கெடுதல் செய்யாது. இதை மங்கு சனி என்பர். இரண்டாவது வரும் ஏழரை நாடு பொங்கு சனி எனப்படும். இது நன்மையைச் செய்யும். மூன்றாவது வரும் ஏழரை நாடு கண்டச் சனி எனப்படும். இது கஷ்டத்தைக் கொடுப்பது.

ஒருவர் சன்னராசிக்கு 4ல் சனி வரும்போது அர்த்தாஷ்டமச்சனி என்றும் 8ல் வரும்போது அஷ்டமத்துச் சனி என்றும் சொல்லப்படும். இக்காலங்களில் நல்ல பலன்கள் கிட்டுவது அரிது.

## நிவர்த்தி

சனிக்கிழமை தோறும் ஸ்ரீசனீஸ்வரபகவான் கோவிலுக்குச் சென்று கோவிலை வலம் வந்து அர்ச்சனை செய்து பூசித்து விரதமிருக்க சகல தோஷங்களும் நிவர்த்தியாகும். வலம் வரும்போது ''ஓம்மந்தாய நம'' என்று சொல்லிக்கொண்டு வருவது நலம்.

சனிப்பெயர்ச்சியின் போது ஸ்ரீசனீஸ்வரபகவானை அர்ச்சனை செய்து வழிபட்டால் அந்த ராசியில் பகவான் இருக்கும் காலத்தில் தீமையை விலக்கி நன்மையைச் செய்வார்.

## கோவில் நிர்வாகம்

அமரர்கள் திரு. சோணையாபிள்ளை, திரு. முத்துப்பிள்ளை இவர்களின் வம்சத்தாராகிய தர்மகர்த்தாக்கள் பரம்பரை முறையில் கோவில் நிர்வாகம் செய்து வருகின்றனர். இக்கோவில் இந்துமத பரிபாலன வாரியத்தாரால் 22-2-27 ஆம் தேதிய 95 எண் உத்திரவுப்படி விலக்களிக்கப்பட்டிருப்பினும் தற்போது அரசினர் மேற்பார்வையும் தணிக்கையும் நடைபெற்று வருகின்றது. கோவில் பூஜை நெய்வேத்தியம் முதலிய பணிகளுக்கு 147 செண்டு பரப்புள்ள நன்செய் நிலம் மட்டுமே சொந்தமாக உள்ளது. நிலத்தின் வருவாயைக் கொண்டே தினசரி பூஜை முதலியன நடைபெறுகின்றன. ஆடிப்பெருவிழாவிலும் ஏனைய சனி வாரங்களிலும் அன்பர்கள் அளிக்கும் உண்டியல் முதலிய வருமானத்தில் உற்சவச் செலவுகள் போக அந்தந்த ஆண்டில் மீதமாகும் சிறு தொகைகள் கோவிலின் பேரால் வங்கிகளில் போட்டு வைக்கப்படுகிறது. அப்பணத்துடன் அன்பர்கள் கொடுக்கும் நன்கொடையும் சேர்த்து திருப்பணி வேலைகள் செய்யப்படும்.

## செல்லும் வழி

வணிகப்புகழ் பெற்ற தேனி மாநகரத்திலிருந்து தெற்கே இருபது கிலோ மீட்டர் தூரத்தில் குச்சனூர் அமைந்துள்ளது. வெகு காலமாக இவ்வூருக்கு சரியான போக்குவரத்து வசதி இல்லாததால் இத்தலத்திற்கு வரும் அன்பர்கள் மிகவும் அல்லல்பட்டனர். அண்மையில் தேனியிலிருந்து உப்புக்கோட்டை வழியாகவும், உத்தமபாளையத்திலிருந்தும், சின்னமனூரிலிருந்தும் மார்க்கயன்கோட்டை வழியாகவும் குச்சனூருக்குத் தனிரோடு



இரா. ராஜா, M.A., B.L.,
*நிர்வாக அதிகாரி*

எம்.எம். திருமலைமுத்து
*நிர்வாக அறங்காவலர்*

மற்றும்

அறங்காவலர்கள்

D. கருப்பையாபிள்ளை

M. முத்துச்சோனை

M. திருமலை முத்துக்குமார்

M. பிரபாகர்

T..M. திருமலை முத்து

Late. P.S.T. கருப்பையா

குச்சனூர் - 625 515.



போடப்பட்டிருப்பதால் பஸ் வசதி ஏற்பட்டுள்ளது. மேலும் நேர் கிழக்கே ஒரு மைல் தொலைவிலுள்ள சீலையம்பட்டி கோவில்பட்டி (மேலப்பூலானந்தபுரம்) இவ்வூர்களின் வழியாக முல்லைப் பெரியாற்றின் குறுக்கே போடப்பட்டுள்ள நடை பாலத்தின் வழியாகவும் இவ்வூருக்கு வரலாம். போக்குவரத்து வசதி ஏற்பட்ட பிறகு இங்கு வரும் பக்தர்கள் கூட்டம் நாளுக்கு நாள் பெருகி வருகிறது.

## கோவில் திருப்பணி

வளர்ந்து வரும் சமுதாய நிலைக்கேற்ப கோவில் வளர்ச்சியும் இன்றியமையாதது. தமிழ்வேள் ஐயா திரு. பிடி.டி.ராசன் அவர்கள் துவக்கி வைத்த கோயில் திருப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அன்பர்களின் பலரின் பொருள் உதவியால் சில திருப்பணிகள் நிறைவேறியுள்ளன. பல திருப்பணிகள் நடைபெற வேண்டியுள்ளன. பரந்த உள்ளமும் நிறைந்த பக்தியும் கொண்ட அன்பர்கள் கோவில் வளர்ச்சிக்கு உதவி செய்து அருள்மிகு சனிபகவானின் அருள் கடாட்சத்திற்கு உரியவாகும்படி வேண்டப்படுகிறார்கள்.

ஸ்ரீ ராம ஜெயம்

## தினகரன் மான்மியம் – உரைநடை

### காப்பு

*நீர்வளமருவுஞ்சோலை நிறைஎழில் குச்சனூரில்*
*பார்புகழ்ந் திருங்காகேச பகவனதருள் பெற்றோங்கும்*
*சீர்தரும் சிறப்புச் செங்கோல் தினகரன் சரிதை கூற*
*வாரணமுகத்தான் பொற்றாள் மலரடி சென்னிவைப்போம்.*

### சபையோர்

*வேதம் பெருகத் தினகரன் மான்மியமும் பெருகவிளங்கமனு*
*நீதம் பெருகக் குச்சநகர் நிமலன் சனீச்சுரன் சரண்*
*போதம்பெருகத் துதிமுத்து பூமன் பெருக வந்தமர்ந்த*
*நாதம் பெருகும் அடியவரின் நளினமலர்த்தாள் சிரத்தணிவாம்*

நூல்

## குலிங்க நாட்டின் சிறப்பு

குலிங்க நாடு வளம் கொழிக்கும் நாடு. மழை பெய்யாத மாதமே இல்லை. பெய்யும் காலத்து தவறாமல் பெய்யும் வானளாவிய மலைகள் நிறைந்த நாடு. மலைகளின் மீது மேகங்கள் தவழ்ந்தோடும். சிவகங்கை என்ற ஆறு பாய்ந்தோடுகிறது. ஆற்றில் என்றும் நீர் வற்றுவது இல்லை. ஆற்று நீர்வாய்க்கால், குளம், குட்டை முதலிய நீர் நிலைகளையெல்லாம் நிரப்பி வயல்களில் பாய்ந்து ஆண்டு முழுவதும் குன்றா விளைச்சலைக் கொடுக்கும். மா, பலா, வாழை முதலிய கனி மரங்களும் குறைவில்லை. நெல் கரும்பு போல கரும்பு வாழை போல, வாழை கழுகு போல, கழுகு தென்னை போல காணப்படும். அங்கு விளையாத பொருள்களே இல்லை. தினகர மன்னனின் சீரிய ஆட்சியால் உழவர்கள் உளம் மகிழ்ந்து வாழ்ந்தனர்.

குலிங்க நாட்டு வீதிகளிலெல்லாம் மாட மாளிகைகள் தோன்றும். அங்கு பலவகையான இரத்தினக்கற்கள் பதிக்கப்பட்டு ஒளி வீசும். ஆடவரும் பெண்டிரும் கலைகளில் தேர்ந்தவர். பெண்டிர் தன் கணவரோடு ஊடியும் கூடியும் மகிழ்வர். அறநெறி தவறாது வாழும் அந்நாட்டு மக்கள் தம்மை நாடிவரும் ஏழை எளியவருக்கும் துறவியர்க்கும் அகமும் முகமும் மலர்ந்து அமுது படைப்பர். வேண்டுவோர்க்கு வேண்டுவன ஈயும் பெருங்குணம் படைத்தவர்கள் அவர்கள். வீரமும் தீரமும் கொண்ட அந்நாட்டவர்க்கு இல்லை என்ற சொல்லே தெரியாது.

## மணிநகரத்தின் மாண்பு

குலிங்க நாட்டின் தலைநகரம் மணிநகரம். மணிநகரம் அதன் பெயருக்கேற்றவாறு அழகானது. கலைமகளும், அலைமகளும் வீற்றிருக்கின்ற தாமரை மலர் போன்ற அமைப்புடையது. அந்நகரைச் சுற்றிலும் மேருமலை போன்ற உயரமான சுவர்களும் சுவரைச் சுற்றிலும் ஆழமான அகழியும் நான்குபுறமும் உண்டு. முதலைகள் நிறைந்த அந்த அகழியில் வீழ்ந்தவர் மீளுவது அரிது. வீதிகள் தோறும் அழகான உயர்ந்த மாளிகைகள் காணப்படும். வீட்டு வாசல்களில் விருந்தினரை வரவேற்க பெண்கள் காத்திருப்பர்.

வாழ்த்தொலியும், வேதங்கள் ஓதும் ஒலியும் பக்தர்கள் பரமனைத் துதித்து பாடும் ஒலியும் கோயில்களில் நடைபெறும் பூசனை, விழா முதலியவற்றின் ஒலியும் கேட்போர் மனதை பரவசமூட்டும் பெண்களின் இன்னிசையும் கேட்டு இன்புறலாம். யானைகள் ஆர்ப்பரிக்கின்ற ஓசையும் முரசடிக்கின்ற ஓசையும் இடியோசை போல முழங்கும். மாந்தர்கள் வேத நெறிப்படி வாழ்ந்தார்கள். அறிவிலும் ஆற்றலிலும் மேம்பட்ட அந்நகரமக்கள் தினகர மன்னனைத் தம் தந்தையாகக் கருதினர்.

## தினகரன் கீர்த்தி

மணிநகரைத் தலைமையாகக் கொண்ட குலிங்க நாட்டை தினகரன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். தினகரன் வேதநெறி வழுவாதவன். தன் நாட்டுக் குடிகளுக்குத் தாய் போன்றவன். குடிமக்கள் தம் தோழனை அணுகுவதுபோல அவனை அணுகி தம் குறியீட்டையும் முறையீட்டையும் அறிவிப்பர். கடவுள் போன்ற கருணையுடைய அவன் தன் நாட்டில் பாவமே நிகழாதவாறு காத்து வந்தான். ஆறிலொரு பங்கு மக்கள் வரி செலுத்தினர். ஏனைய மன்னர்கள் தங்கள் கடமையைத் தவறாமல் செலுத்தி இவன் பாதங்களை வணங்கிச் செல்வர். பகைவர்க்கு சிங்கம் போன்றவன். நண்பர்க்குத் தங்கமானவன். வாய்மையே இவனுக்குத் தெய்வம். அறமே துணைவன். மன்மதனைப் போன்ற அழகன். பல யாகங்கள் செய்து பதவி பெற்ற இந்திரனைப் போன்றவன்.

## பிள்ளைப் பேறில்லாமை

தினகரன் ஒரு நாள் ஏனைய மன்னர்கள் புடைசூழ தன் மந்திரிகளோடும், வேதவல்லுநர்களாகிய அந்தணர்களோடும் மற்ற சான்றோர்களோடும் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான். அப்போது அரசன் தன் மந்திரியிடம் விந்துருவை என்னும் தன் மனைவியைக் கொலு மண்டபத்திற்கு அழைத்து வரும்படி ஆணையிட்டான். மந்திரியும் அரசன் ஆணைப்படி தோழியர்களை ஏவிதேவியை அரச சபைக்கு வரவழைத்தான். கவலையில் மூழ்கியிருந்த அரசமாதேவி கணவன் கட்டளைப்படி அரசமண்டபத்தை அணுகினாள். அரசனை அணுகிய விந்துருவை தன் கணவனை நோக்கி பிள்ளைப்பேறில்லாமல் மனம் நொந்து போயிருக்கும் இப்பாதகியை சாத்திரவல்லுநர்களாகிய சான்றோர்கள் கூடிய இச்சபைக்கு வரும்படி

கூறலாமோய நால்வகை படைகளோடு நீதி வழுவாது மன்னர்க்கு மன்னனாக ஆட்சி செய்தாலும், தேவேந்திரனைப் போல பெரும் புகழ் பெற்றுத் திகழ்ந்தாலும் பிள்ளைப் பேறில்லாதவர்க்குப் பெருமை உண்டோ? குழந்தைகளின் மழலைச் சொற்கள் கேட்கும் அவர்கள் இளம்மேனியைத் தீண்டியும், அவர்கள் நடை உடை பாவனைகளைப் பார்த்தும் இன்பம் அடையாத பிறவியும் பிறவியாகுமோ? மாதவன், நாரணன், சீதரன், கேசவன் என்றெல்லாம் துதிக்கப்படும் நம்பெருமான் எழுந்தருளியுள்ள கோவில் பூஜைகளில் யாதேனும் குற்றம் நேர்ந்ததோ? புத்திரர் இன்றி நாம் வாழும் வாழ்க்கை என்ன வாழ்க்கை எண்ணுகின்றீர்? பக்தர்கள், ஞானிகள், துறவிகள் முதலிய சான்றோர்களுக்கு வேண்டிய தானதருமங்கள் செய்தால் சந்ததியுண்டாகுமென்று நூல்கள் கூறுவது தாங்கள் அறியாததா? என்று பலவாறு கூறி வருந்தினாள். தேவி கூறியதைக் கேட்ட மன்னனும் மனம் கவன்றான்.

## வழிபாடும் தான தருமமும்

தனக்கு சந்ததியில்லாக் குறையை உணர்ந்த அரசன் அமைச்சர்கள் வாயிலாக தன் நாட்டிலுள்ள திருமால், சிவன், முருகன் முதலிய தெய்வங்களுக்கும், நவகிரகங்களுக்கும் காளி, மாரி, பிடாரி முதலிய குலதெய்வங்களுக்கும் தவறாமல் பூஜை நைவேத்தியம், திருவிழா முதலியன நடைபெறும்படி செய்தான். முனிவர்கள், துறவிகள், குருக்கள், யோகிகள் முதலிய சான்றோர்களுக்கும் இல்லறவாசிகளாகிய ஏழை எளியவர்க்கும் இல்லையென்னாது பொன்னும், பொருளும், அன்னமும் ஆடையும் வழங்கும்படி ஆணையிட்டான். தினகரன் ஆட்சியின் பெருமை திக்கெங்கும் பரவியது. வானுலகத்தையும் எட்டியது. அறநெறி தவறாத குலிங்க நாட்டின் ஆட்சியையும் வந்தவர்க்கெல்லாம் வாரி வழங்கும் தான தர்மங்களின் மாட்சியையும் தேவர்களும் கேள்வியுற்றனர். தினகரனின் ஆட்சிச் சிறப்பை நேரில் பார்த்துவர தேவர்கள் அரம்பையரை பூவுலகத்திற்கு அனுப்பினர்.

## தேவ அரம்பையர் வருகை

தேவ அரம்பையர் குலிங்க நாட்டை அடைந்தனர். மணிநகரத்துக்குச் சென்றனர். தினகர மன்னனின் அரண்மனையை அணுகி தம் வரவை அறிவித்தனர். அரசனும், அமைச்சர்

முதலியோரும் தேவ அரம்பையரை வரவேற்றனர். அரம்பையர் தேவகானம் ததும்ப இன்னிசை பாடி ஆடினர். தேவ நடனம் புரிந்தனர். தேவமாதர்கள் தம் இனிய பாடல்களாலும், நாட்டிய நர்த்தனங்களாலும் அரசன், அமைச்சர் முதலிய சபையோர் அனைவரையும் மகிழ்வித்தனர். மகிழ்ச்சிக்கடலில் மூழ்கிய மன்னன் மந்திரியிடம் அவர்களுக்கு ஏற்ற பொன், மணி, ஆடை ஆபரணம் ஆகியவற்றை பரிசு வழங்குமாறு கூறினான். அமைச்சரும் அப்பெண்டிர்க்குப் பலவகை விலையுயர்ந்த பொருள்களை வழங்கினர். தேவ அரம்பையர் அப்பொருள்களைப் பெற மறுத்துவிட்டனர். காரணம் வினவிய போது பிள்ளைப்பேறில்லாதவர் இல்லத்தில் பொருள் பெறுபவர்க்கு வீட்டுப்பேறில்லை என்பது வேத வாக்காதலால் எதையும் தாங்கள் இல்லத்தில் வாங்கமாட்டோம் என்று கூறினர். அமைச்சர் செய்தியை அரசனுக்கு அறிவித்தார். தினகரன் அத்தேவமாதர்களை அணுகி குழந்தை இல்லாமைக்குத் தானும் தன் தேவியும் வாடி வருந்துவதை எடுத்துக் கூறி அவர்களை வணங்கி தம் கவலையைப் போக்க என்ன செய்யலாம் என்று வேண்டினான். தேவமாந்தர் தினகரனை நோக்கி நாங்கள் சென்ற பிறகு உன் குலிங்க நாட்டில் பிறந்த பிராமணக் குழந்தை ஒன்று உன் இல்லத்திற்கு வந்து சேரும். அக்குழந்தையை கையில் ஏந்தியவுடன் உன் தேவியிடத்து பால் சுரக்கும் அப்பாலை அருந்திய அக்குழந்தை உன் இல்லத்திலேயே வளரும். அக்குழந்தை உங்களிடம் வளர்ந்து வரும் நாளில் உன் மனைவி கருவுற்று இவ்வுலகத்தை ஆளும்படியான ஒரு மைந்தனைப் பெறுவாள். பிறகு உங்கள் கவலையெல்லாம் மறையும் என்று கூறி மறைந்தனர்.

## ஊர்க்குழந்தைகளை வளர்த்தல்

அரம்பையர் சென்றபின் அரசன் யாது செய்வதென்றறியாமல் திகைத்துக் கொண்டிருந்தான். மூவருக்கும் முதல்வனே நாராயண மூர்த்தியே பகவானே பாவியாகிய என்மீது கருணை செய்யமாட்டாயா! என்று இறைவனை இறைஞ்சினான். கணவன் கவலையோடிருப்பதை அறிந்த விந்துருவை காதலரே! இனி வருத்தப்பட்டுக் கொண்டிருப்பதில் பயனில்லை. இந்த மணிநகரத்திலுள்ள அந்தணர் அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நான்கு வருணத்தார் வீட்டுக் குழந்தைகளையும் தன் அரண்மனைக்கு கொண்டுவரும்படி செய்யுங்கள். அவைகளை நாம்

வளர்த்து வருவோம் என்று கூறினான். அவ்வாறே ஊரில் உள்ள எல்லாக் குழந்தைகளையும் தம் இல்லத்திற்கு கொண்டுவரும்படி அரசன் அமைச்சரிடம் அறிவித்தான். எல்லாக் குழந்தைகளும் அரசியிடம் வந்து சேர்ந்தன. அரசி பொன்னாலும், மணியாலும் ஆன தண்டை, சிலம்பு, காப்பு, அரைஞாண், கழுத்தாரம் முதலிய ஆபரணங்களை அணிவித்து அழகுபடுத்தினாள். அமுதம் போன்ற அரிய உணவுகளை ஊட்டினாள். அக்குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டு மகிழ்ந்தாள். அவைகளைத் தொட்டும் தூக்கியும் உச்சி மோந்தும் கொஞ்சிக் குலாவினாள். இவ்வாறு அரசனும் தேவியும் ஒருவாறு கவலையை மறந்து இருந்தனர் என்றாலும் அரம்பையர் சொன்ன குழந்தை எப்போது வருமோ என்று எதிர்பார்த்தனர்.

## பிராமணனுக்கு குழந்தை பிறத்தல்

தினகரனும், தேவியும் ஊர்க்குழந்தைகளை வளர்த்து வரும் காலத்தில் குலிங்க நாட்டிலுள்ள ஓர் ஊரில் ஏழை அந்தணன் ஒருவனுடைய மனைவி ஒரு அழகான ஆண்குழந்தையைப் பெற்றாள். அக்குழந்தையைக் காண்பவர் இராமனோ, பூமானோ, மன்மதனோ, இந்திரனோ என்று பாராட்டினர். குழந்தையின் தோற்றம் எதிர்காலத்தில் அவன் நாட்டை ஆளும் பெரும் மன்னனாகத் திகழ்வான் என்பதைக் காட்டியது. அந்தப் பிராமணன் தன் வறுமை நிலையால் அக்குழந்தையை வளர்க்க முடியாமல் திண்டாடினான். பசியும், பட்டினியுமாக வாழ்ந்த அப்பார்பணியிடத்து அக்குழந்தைக்குப் போதிய பால் இல்லை. வேறு பால் வாங்கவும் வழியில்லை. அக்குழந்தை வறுமையால் மெலிந்து வாடியது. பிராமணன் நிலையைக் கண்ட அவ்வூரர் தினகர மன்னன் இல்லத்தில் ஊர்ப்பிள்ளைகளெல்லாம் சீரும் சிறப்புமாக வளர்ந்து வருவதையும், அங்கு பல வகையான தான தருமங்கள் நடந்து வருவதையும் எடுத்துக் கூறி அவனையும் குழந்தையுடன் அங்கு செல்லுமாறு உரைத்தனர். பிராமணனும் மன்னனை அணுகினால் தம் கவலைகள் நீங்கும் என்று கருதினான்.

## தினகரன் இல்லத்தில் பிராமணக் குழந்தை வளர்தல்

பிராமணன் தன் மனைவியோடும், குழந்தையோடும் மணி நகரம் சென்றான். அரண்மனையை அணுகி காவலரிடம் தன்

வருகையை அரசனுக்கு அறிவிக்குமாறு வேண்டினான். தன் வறுமையைப் போக்கி காக்குமாறு அமைச்சரை பணிந்தான். மறையவன் வருகையை அறிந்த மன்னன் மகிழ்ச்சியடைந்தான். அவன் பாதங்களை வணங்கி வரவேற்றான். மறையவன் தினகரனிடம் அரசே! நான் ஒரு ஏழைப் பிராமணன். இவள் என் மனைவி. இது எங்கள் குழந்தை எங்கள் வறுமை நிலையால் இந்த குழந்தையை வளர்க்க முடியவில்லை. இப்பார்ப்பணியிடத்து பாலில்லை. பால் வாங்கவும் வழியில்லை. தாங்கள் கருணை கூர்ந்து எங்கள் வறுமைத் துயரைப் போக்க வேண்டும் என்று வேண்டினான். தினகரன் அக்குழந்தையை அந்தணனிடம் வாங்கி தன் மனைவி விந்துருவையிடம் கொடுத்தான். அரசி அக்குழந்தையை வாங்கி உச்சிமோர்ந்து கொஞ்சி மகிழும் போது அவள் கொங்கைகள் விம்மி பால் சொரித்தன. அப்பாலை அருந்திய பிராமணக் குழந்தை துள்ளி மகிழ்ந்தது. அரசி அக்குழந்தையை தானே வளர்த்து வர விரும்பினாள். அரசன் கருத்தை அறிந்த அந்தணன் குழந்தையை அவர்களிடமே விட்டுவிட ஒருப்பட்டான். குழந்தையை கொடுத்த அந்தணன் மனம் குளிர அவனுக்கும் மன்னன் பொருளும், பொன்னும், நிலமும் வேண்டியன கொடுத்து அனுப்பி வைத்தான். தினகரன் மன்னனை அந்தணரும் அரசியலாரும் பாராட்டினர். தேவ அரம்பையர் கூறிய குழந்தை இந்த குழந்தையே என்று கருதி உவகை எய்தினர். தேவி தான் முன்பு வளர்த்த குழந்தைகளையெல்லாம் அவரவர் இல்லங்களுக்கு அனுப்பிவிட்டு பிராமண குழந்தையை மட்டும் வளர்ந்து வந்தாள். தேவி அக்குழந்தையை தன் குழந்தையாகவே கருதினாள். அரிதாகப் பெற்ற செல்வத்தை வருந்திக் காப்பது போல் சீரும் சிறப்புமாகப் போற்றினாள். பொன், மணி, முத்து முதலியவைகளாலான நகைகளை பூட்டியும், பட்டாடைகளை அணிவித்தும் அன்போடு வளர்த்து வந்தாள்.

## விந்துருவைக் குழந்தை பிறத்தல்

பார்ப்பணக் குழந்தையை வளர்த்து வரும் காலத்தில் அரசமா தேவியாகிய விந்துருவை கருவுற்றாள். கரு முதிர்ச்சியடைந்ததும் நல்ல நாளில் ஒர் ஆண் மகனைப் பெற்றாள். திருமாளின் திருக்கையில் விளங்கும் வலம்புரி சங்கு ஈன்ற அரியமுத்துப்போல

அக்குழந்தை பிரகாசத்தோடு விளங்கியது. குழந்தை பிறந்ததும் அந்தணர், அறவோர், புலவர் முதலிய சான்றோர்க்கும் ஏனைய சுற்றத்தார்க்கும் தான தருமங்கள் செய்தனர். அரசனும் அரசியும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர். மணிநகரமே கோலாகலமாகத் திகழ்ந்தது. குழந்தைக்குச் சாதகம் கணித்துப் போற்றி வளர்த்தனர். குழந்தை மழலை பேசியும், தவழ்ந்து ஆடியும் தளர் நடை இட்டும் பெற்றோரையும் உற்றோரையும் பெருமிதப்படுத்தியது.

## பிள்ளைக்கு பெயர் சூட்டல்

இரண்டு குழந்தைகளையும் இரண்டு கண்களைப் போல சிறிதும் வேறுபாடின்றி அன்போடு வளர்த்து வந்தனர். மன்னன் அப்பிள்ளைக்குப் பெயர் சூட்டுவிழா நடத்த விரும்பினான். கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய வல்லுநர்களையழைத்து அவர்களோடு கலந்து உரையாடினான். முதல் பிள்ளை சந்திரவதனன் என்றும் விந்துருவை பெற்ற இரண்டாவது பிள்ளைக்கு சதாகன் என்று பெயரிட்டான்.

## கல்விப்பயிற்சி

சிவபெருமானின் தொண்டரும் தமிழ் வல்லுநருமாகிய அகத்தியரைப் போன்ற சிறந்த ஆசான் ஒருவரை அழைத்து வந்து கலையருள் பொருந்திய அக்குழந்தைகளுக்குக் கல்வி புகட்டச் செய்தனர். பிள்ளைகளும் அவரைப் பணிந்து வணங்கி கற்க வேண்டியவையெல்லம் கற்றுத் தேர்ந்தனர். வேத சாஸ்திரங்களில் வல்லவராகிய அந்த ஆசான் பிள்ளைகள் மனப்பாங்கை அறிந்து ஓம் என்று துவங்கி இனிமையான தேனை ஊட்டுவது போல சகல சாஸ்திரங்களையும் கற்பித்தார். கல்வியிலும், கலைகளிலும் தேர்ச்சி பெற்றதோடு சிறுவர்கள் இருவரும் யானையேற்றம், குதிரையேற்றம் முதலிய போர்ப் பயிற்சிகளையும் பயின்று தேர்ந்தனர். நாட்டை ஆளுவதற்கான எல்லாத் திறமைகளும் பெற்றுத் திகழ்ந்தனர். சிறுவர்கள் இருவரும் கல்வி பயிலும் போது உணவு அருந்தும் போது படுத்துத் தூங்கும்போதும் இணை பிரியாமல் ஒன்றாகவே வளர்ந்து வந்தனர். உள்ளன்போடு ஒருவரை ஒருவர் நேசித்தனர்.

## முடி சூட்டல்

வயது முதிர்ந்த தினகர மன்னன் தம் பிள்ளைகளுள் ஒருவனுக்கு முடிசூட்ட விரும்பினான். தன் தேவியை நோக்கி சகலகலைகளிலும் தேர்ச்சி பெற்றுள்ள நம் பிள்ளைகளுள் ஒருவனுக்கு முடிசூட்ட விரும்புகிறேன். இருவருள் தகுதியானவன் யார் என்று சொல் என்று வினவினான். அரசி தங்கள் எண்ணம் எதுவோ அதுவே என் விருப்பம் என்று பகன்றாள். அரசன் மூத்தவனுக்கே முடிசூட்ட விரும்புகிறேன் என்றான். அரசியும் தினகரன் கருத்தையே சரி என்று ஒப்புக் கொண்டாள். பிறகு அரசன் மந்திரிகளை அழைத்து தன் கருத்துத் தெரிவித்தான். மந்திரிகள் தகுதியுள்ள ஆண்பிள்ளை தங்களுக்குச் சொந்தமாக இருக்க எங்கிருந்தோ வந்த பார்ப்பனப் பிள்ளைக்கு முடிசூட்டுவது அரசமுறையாகுமோ? என்று வாதிட்டனர். அரசன் அவர்களுக்குத் தக்க சமாதானம் கூறி ஏற்றுக் கொள்ளும்படி செய்தான். மந்திரிகளும் மனமுவந்து ஏற்றுக் கொண்டனர். சந்திரவதனனுக்கே முடிசூட்டுவதென்று முடிவாயிற்று.

கணித வல்லுநர்களைக் கொண்டு முடிசூட்டுவதற்குரிய நல்ல நாளைக் குறித்தனர். தெருக்களெல்லாம் அலங்கரிக்கப்பட்டன. ஏனைய மன்னர்களுக்கும் ஓலை போக்கப்பட்டது. அந்தணர் அறவோர் முதலிய பெரியோர்களும் வரவழைக்கப்பட்டனர். குறித்த நாளும் வந்தது. மன்னர்கள் சூழ்ந்தனர். தோரண கும்பங்கள் துலங்கின. மாணிக்கக்கற்கள் பதித்ததும் ஒளிமயமானதுமாகிய சிம்மாசனத்தில் சந்திரவதனனை அமர்த்தினர். அந்தணர்கள் வேதம் ஓத மங்களவாத்தியமும் முழங்க மங்கையர் நடனமாட மணி முடிசூட்டினர். அவையோர் முடிசூட்டி விழா இனிது முடிந்தது.

## சந்திரவதனன் சிந்தனை

தம்பி சதாகனின் துணையோடு சந்திரவதனன் நீதி நெறி தவறாது ஆட்சி செய்து வந்தான். எப்போதும் இருவரும் ஒன்றாகவே உண்டும் உறங்கியும் அன்போடு இருந்தனர் என்றாலும் சந்திரவதனன் மனதில் பெற்ற மகனிருக்க தனக்கு முடி சூட்டியது தக்கதாகுமா? என்ற எண்ணம் உறுத்திக் கொண்டிருந்தது. தாயும், தந்தையும் தனியே கூடிப்பேசி தனக்கு முடி சூட்டியதன் காரணத்தை அறிய விரும்பினான். அமைச்சர்களை அழைத்து

உசாவினான். அமைச்சர்கள் தமக்கும் புலப்படாது சோதிடர்களை அழைத்து கேட்பது நல்லதென வரவழைத்தனர். தினகர மன்னனின் சாதகத்தை பார்ப்பதென முடிவு செய்தனர்.

## சோதிடர் தினகரனைப் பற்றிக் கூறியது

கணித நூலில் வல்ல சோதிடர்கள் வந்தனர். சந்திரவதனன் சோதிடர்களை வரவேற்று உபசரித்து தன் தந்தை தினகரன் சாதகத்தை நுண்ணியதாக ஆராய்ந்து நடக்கும் பலனை உள்ளவாறு சொல்லும்படி வேண்டினான். சோதிடர்கள் தினகரன் சாதகத்தைக் கவனமாகக் கணித்துப் பார்த்தனர். தினகரன் பிறந்த ராசியில் சனிபகவான் ஏழரை ஆண்டு காலமும் தினகரனுக்கு பகைமையும், தொல்லையும், துன்பமும் ஓயாது வந்து கொண்டே இருக்கும் என்று கூறினர். அதை தவிர்ப்பதற்கு நெறி தவறாத அந்தணர்களுக்கு பசு, கம்பளம், எள், தேங்காய், பழம், பூசணி முதலியவற்றோடு பொன்னும், பொருளும் தானம் செய்ய வேண்டும். சனிக்கிழமையன்று பால், பழம், பச்சரிசி, சர்க்கரை, தேங்காய், அவல் முதலியவைகளைப் படைத்து பக்தியோடு சனிபகவானைப் பூசிக்க வேண்டும். அவ்வாறு செய்தால் சனிபகவான் தினகர மன்னனின் துன்பங்களைத் தீர்த்து நற்கதி தருவான் என்றும் கூறினர். சந்திரவதனன் சோதிடர்கள் கூறியபடி அந்தணர்களை வரவழைத்து அவர்கள் மனமகிழுமாறு பல பொருள்களைத் தானமாகக் கொடுத்தனுப்பினான். சனிபகவானை வழிபடுவதற்கும் ஆவன செய்தான்.

## சந்திரவதனன் சனிபகவானைப் பூசித்தல்

சந்திரவதனன் சூரியபகவானின் புத்திரனாகிய சனீஸ்வர பகவானை உள்ளன்போடு பூசித்து அவன் திருவடிகளை நேரில் தரிசிக்க வேண்டுமென விரும்பினான். சனிக்கிழமை அன்று உளுந்து, சர்க்கரை, பால், பழம், தேங்காய், எள், எண்ணெய், பிண்ணாக்கு, சூடம், பூசணிக்காய், சந்தனம், வெற்றிலைப்பாக்கு முதலியவற்றை முறைப்படி படைத்து பகவானை நோக்கி மனங்கசித்து துதிக்கலானான்.

பொன்னே மணியே புகழ்வானவனே
மன்னே அருணன் மகிழ் மாநிதியே
என்றே யமுவந் தெளியேற் கருள்வாய்
அன்னே சனியீச அருட்கடலே

கடலாகிய கவ்வையகன் றினிதா
மடல்சேர் வனசக் கழல் வந்தனையைத்
திடமாய் மனமே துதிசெய் திடவே
விடுவாய் கரடப் பரிவித் தகனே

மணியே திகழ் தாமரை நேரடியைப்
பணியேபுரி பாலக னுக்கெதிரில்
துணிவாய் வருவாய் சுகராசிகளுக்
கணியாயுரை ஆதி பராபரனே

பரமேயென உன்னிரு பாதமலர்
திரமா யடியேன் தெரிசித்திடவே
வரமாதவர் போற்றிடுமா அருளைத்
தரவா தபனன் தருசந்ததியே

ததியீதென உன்னிரு தாள்தொழ நன்
மதிவந்தது மென்ன மகிழ்ச்சி யதோ
விதியின் செயல் என்பார்கள் அவ்விதியு
மதிகந்துதி செய் அருணன் மகனே

பகவான்விழி ஆயிரமாய் வரவே
மிக ஆக்கினைவே தியனார் சிரமும்
அகலும்படி செய்தனை அற்புதனே
பகவானென யேன்மை படைத்தவனே

ஐயின் வதனந் தெரியாப் பயிராய்
மையின் குழலாய் அறியா மகவாய்
நையும் அடியேன் தனைநன் கருள்வாய்
வையம் புகழும் சனி மாதவநே

*தவமாத தற்பரஞான அருள்*
*சிவயோக திகம்பர தெள்ளமுதே*
*நவமாகிய தேவர்கள் நாயகமே*
*பவநீக்கிய பாக்கிய நல்லருளே*

*நல்லேனிலன் என்னினு நல்லருளால்*
*அல்லேறிகர் மாசுகளைந் தருள்வாய்*
*எல்லேமகழ் வெய்திட எற்குமுனம்*
*வல்லவாய் வருவாயரின் மதலாய்*

**சனிபகவான் சந்திரவதனன் முன் தோன்றுதல்**

இவ்வாறு துதித்து வழிபடுகின்ற மன்னன் சந்திரவதனன் முன்பு கட்டழகுடையவரும் கல்விமானுமாகிய முத்து வள்ளல் போற்றுகின்ற சனிபகவான் தலையில் மணிமுடி தரித்தும் மலர் மாலையும் சந்தனக்கலவையும் பரிமளிக்கின்ற அகன்ற மார்பில் பதக்கம் ஜொலிக்கவும், கையில் கடகம் மின்னவும் காட்சி தந்தருளினார். தேவர்கள் மலர்மார் பொழிந்தனர். முனிவர்கள் மகிழ்ந்து போற்றினார். சனிபகவானை நேரிற்கண்ட சந்திரவதனன் பெருமகிழ்ச்சி அடைந்தான். பரமானந்த வெள்ளத்தில் மூழ்கினான். தனக்கு முன்னால் தரிசனம் தந்து கொண்டிருக்கும் சனிபகவானை மனமுருகித் துதித்தான்.

தேவேந்திரனும், தவமுனிவர்களும் வேதங்களும் போற்றுகின்ற நிர்மலன் என் முன்னோர்கள் செய்த தவத்தில் பயனாக என் பாவ வினையகல தன் மலர்ப்பாதங்களை நான் நேரில் தரிசிக்கும்படி காட்சி தந்துள்ளார் என்று எண்ணி பலவாறு துதிக்கலானான்.

*செய்யனே போற்றி போற்றி திகழுநற்கனியே போற்றி*
*வையகம் பரப்பாய் போற்றி மறைமுதற் பொருளே போற்றி*
*துய்யநல்லமுதே போற்றி சுகமருள் பகவா போற்றி*
*அய்யனே போற்றி போற்றி அரியின்மா மதலாய் போற்றி*

*பகவானே போற்றி போற்றி பக்தியினுழைந்தாய் போற்றி*
*சகமகிழ்ந்தாயே போற்றி சனீச்சுர பகவா போற்றி*
*அகமலர்ந்தடியேன் போற்றி அருள்புரிபவனே போற்றி*
*சுகமருள்தேவே போற்றி சுந்தரா போற்றி போற்றி*

*என்னையாள்பவனே போற்றி ஏழைங்களா போற்றி*
*வன்னமாமணியே போற்றி வாயசப்பரியாய் போற்றி*
*நன்னயகுருவே போற்றி நாதவேதாந்த போற்றி*
*அன்னையே போற்றி போற்றி அடியனை ஆள்வாய் போற்றி*

## பகவான் திருவாய் மலர்தலும் மன்னன் மறுமொழியும்

சந்திரவதனனுக்கு நேரில் காட்சி தந்த சனீஸ்வரபகவான் அவனை நோக்கி உன் பக்தியை மிகவும் மெச்சினேன். உனக்கு என்ன வரம் பேண்டும் ? என்று வினவினார்.

சந்திரவதனன் பகவானே என் தந்தை தினகரன் சாதகத்தை கணிதர்கள் வாயிலாகப் பார்த்தேன். தாங்கள் என் தந்தையை ஏழரை வருடங்கள் உக்கிரத்தோடு பற்றி வருத்துவீர்கள் என்று அறிந்தேன். அதைத் தவிர்க்கவே தங்களைப் பணிந்து பூஜை செய்கிறேன் என்றான்.

சந்திரவதனன் கூறியதைக் கேட்ட பகவான் அப்பா நீ சொல்வது விந்தையாக இருக்கிறது. வானுலகத்திலும், பூவுலகத்திலும் நான் பற்றாதவர் இல்லை. பிரம்மதேவனாயினும் பெரும் முனிவனாயினும் நான் பற்றுவதைத் தடுப்பார் யார்! ஆதிமூர்த்தியாகிய சிவபெருமானைப் பிச்சையெடுத்து உண்ணும்படியும், தம் உடம்பில் பாதியை உமாதேவிக்கு அளிக்கும்படி செய்தேன். முருகக் கடவுளைக் குறவரோடு சேர்த்தேன். சந்திரமதியை அவள் கணவனாகிய அரிச்சந்திரனே கூர்மையான வாளால் வெட்டும்படி செய்தேன். நள மகராஜா தன் நாட்டையும், மனைவி மக்களையும் துறந்து காட்டில் வாழும்படி செய்தேன். தருமன் முதலிய பாண்டவ ஐவரும் தம் நாட்டையிழந்து அச்சந்தருகின்ற வனத்திற்குச் செல்லும்படி செய்தேன். திருமாலை இராமவதாரத்தில் சீதையைப் பறிகொடுத்து மயங்கும்படி செய்தேன். இவ்வாறு நிகழ்ந்தவை எத்தனையோ உண்டு. இது என் கடமை என்று கூறினார்.

சந்திரவதனன் எப்படியாகினும் என் தந்தையை துன்பக் கடலிலிருந்து நீக்கியருள வேண்டும் என்று மன்றாடினான். சந்திரவதனன் மன்றாடி இறைஞ்சுவதை உணர்ந்த சனிபகவான் மனமிரங்கி கருணை கூர்ந்து அப்பா உன் ஆழ்ந்த பக்திக்காக உன் தந்தைக்குரிய ஏழரை ஆண்டை ஏழரை மாதமாக ஆக்குகிறேன் என்று பணித்தார்.

மீண்டும் சந்திரவதனன் பகவானை வணங்கி ஐயனே உன்னைப் போன்ற அருள் உருவமானவர் என் தந்தையைப் பற்றுதல் ஏற்றதன்று. அதற்கு ஈடாக என்னைப் பற்றிக் கொள்ளுங்கள் என்று வேண்டினான்.

சனிபகவானும் மகிழ்ந்து அடுத்த வாரமே உன்னைப் பற்றுவோம் என்று அருள் புரிந்து சந்திரவதனின் தூய்மையான பக்தியை வியந்து மறைந்து சென்றார்.

## சந்திரவதனன் காட்டில் பகவானைப் பூசித்தல்

சந்திரவதனன் பூஜையை விடாமல் தொடர்ந்து நடத்த விரும்பினான். மனதைத் திடப்படுத்திக் கொண்டு ஆழ்ந்த பக்தியோடு பூஜை செய்தான். சனிவாரம் வந்தது. அரண்மனையிலிருந்து பகவானைப் பூசித்தோமெனில் மனம் ஒருவழிப்படாது என்று எண்ணினான். பூஜை அர்ச்சனை முதலியவற்றிற்குத் தேவையான பொருள்களையெல்லாம் சேகரித்தான். இரும்பினால் பகவானைப் போல் அழகான ஒரு உருவம் சமைத்தான். இவைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு காட்டுக்குச் செல்லத் துணிந்தான்.

உடன் துயில்கின்ற தம்பி சதாகன் அயர்ந்து தூங்கும் சமயம் பார்த்து தேவர்களும் போற்றுகின்ற சனீஸ்வரபகவானின் திருவடிகளே தஞ்சமென்று நம்பி நிறைந்த உள்ளத்தோடு சந்திரவதனன் ஓர் அடர்ந்த காட்டுக்குச் சென்றான். அருகிலிருந்தால் யாரும் கண்டு தம் தந்தையிடம் கூறுவர். நம் பூஜைக்கு இடையூறு வரலாம் சற்று தூரம் சென்று மரங்கள் நிறைந்த சோலைக்குள் அமர்ந்து கொள்வதே மேல் என்று கருதினான். சுருளி மலையிலிருந்து பாய்ந்து வரும் அருவியின் அருகில் செண்பக மரங்கள் செறிந்துள்ள சோலையை அடைந்தான். அங்கு ஓரிடத்தில் அமர்ந்து பகவானை

எழுந்தருளச் செய்து பெரும் பூசணி, எள் எண்ணெய், கற்பூரம், பாக்கு, வெற்றிலை முதலிய பூஜைப் பொருள்களை முறைப்படி படைத்துத் துதித்துக் கொண்டிருந்தான்.

## சதாகன் விழித்துத் தமையனைத் தேடல்

அரண்மனையில் தன் தமையனோடு தூங்கிக் கொண்டிருந்த சதாகன் விழித்தெழுந்து தமையனைக் காணாது கலங்கினான். அரண்மனையின் நாலாபக்கங்களிலும் தேடினான். தென்படவில்லை வெளியில் புறப்பட்டான். பல இடங்களிலும் தேடினான். எங்கும் சந்திரவதனனைக் காணவில்லை. வருந்திக் களைத்துக் காட்டில் ஒரு மரநிழலில் சோர்ந்து தூங்கிவிட்டான்.

## சந்திரவதனன் தொடர்ந்து துதித்தல்

இவ்வாறு தன்னைத் தேடிவந்த தம்பி எங்கேயோ, தூங்கிக் கொண்டிருக்க சந்திரவதனன் தொடர்ந்து காட்டில் சனிபகவானை வனத்திலிருந்து தன் இலட்சியம் நிறைவேற வேண்டுமென்று விடாமல் துதித்தான்.

*வேதனே விமலனே விளங்கும் கர்த்தனே*
*சோதியே பகவனே துலங்கு நித்தனே*
*நீதிசேர் உன்னருள் நிறைந்த ஏழையேற்*
*காதியே அருள்புரி அருணன் மைந்தனே*

*சிவ்வொடு நவ்விலே சிறந்து நின்றவா*
*மவ்வொடு வவ்விலே மகிழு மாதவா*
*அவ்வுமோங் காரமா யமர்ந்த நாதனே*
*கவ்வைதீர்த் தருள்புரி கதிரின் சேயனே*

*பாலனேன் மனத்திடர் பகவ ஓர்ந்தினும்*
*காலதா மதமெவன் கருணை செய்திட*
*வேலைவாய்த் துரும்பென மெலியும் ஏழையைச்*
*சீலமா யாண்டருள் தேவ தேவனே*

*வையகமுனிவ ரோடுமனிதருக்கு வருங்குறி, களைத் தெரிவித்து*
*துய்ய நல்லன்னம் பந்துடநுகரும் சுகமிகு கரடநற் பரியாய்*
*செய்யனேகனியே தினகரமணியே தேவனே எனத்துதியாது*
*பொய்யுரைப்பவரை அடக்குங்கார்க்காரியோய்*
*போற்றிடாதவர்களுக்கரியோய்*

*காலையிநியம் முடித்திட எண்ணிக் கதிரவ னெழுமுனம் எழுந்து*
*பாலொளிக்கங்கை படிந்து பாற்கரனைப் பணிந்திடும்*
*வாயசக்கொடியோய்*

*வேலையினொலியோ விண்முகிலொலியோ யேதிமுன்னமே திருங்*
*காலையிலெழுந்த ஒலி கொலாவேன்னக் கருச்சனைபுரியமும்*
*மும்மரசோய்*

*அதவன்மதியங் காரகன் அருணன் ஆண்ட எப்பான்புகழ்வருடை*
*கோதிலாவிடையு மிதுனநற்கடகம் கூடியராசி நாட்களுமுன்*
*ஓதியமுனிவர் தேவர்மாதவரும் உலகிடை வாழுமன்னுயிரும்*
*நீதியாய்த்தத்தம் நிலைதவறாமல் நெறிவழியொழுகும்*
*ஆணையினாய்*

*அன்னமே குயில்களே அமரும் அன்றில்கான்*
*பொன்னிறத் தோகைகள் புள்ளிமான்களே*
*நன்னய வாயசப் புரவி நாதனை*
*மன்னுமிக் கானகம் வரக்கண் டீர்களோ?*

## சனிபகவான் மீண்டும் காட்சியளித்தல்

சந்திரவதனன் இவ்வாறு மனமுருகித் துதித்து வழிபடுவதைக் கண்டு மனமிரங்கி கன்றைத் தேடி வரும் காமதேனுவைப் போல பகவான் அவன்முன் தோன்றி அப்பா நீ செய்கின்ற தவத்தின் மகிமையை வானுலகமும் மெச்சுகிறது. ஆதலால் நான் சொல்வதைக் கேள். முன்பு ஏழரை வருடம் பற்றுவதாகக் கூறினோம். தற்போது உன் தவத்திற்கு இரங்கி ஏழரை நாளிகை மட்டும் பற்றுவோம். அப்போது உன் துரைத்தனமெல்லாம் போய் விடும். அவ்வாறு ஒன்றும் செய்யாமல் அருள்புரிவோமெனில் பூமியில் சகல ராசிகளுக்கும் குற்றம் வந்து சேரும். உன் எண்ணம் யாது என்று பகவான் கேட்டார்.

சந்திரவதனன், தாங்கள் கூறியபடியே என்னைப் பற்றிக் கொண்டு காப்பாற்றுங்கள் என்று ஒப்புக் கொண்டான். அதற்கு பகவான் அவனிடம் உன்னைப் பற்றிக் கொண்டிருக்கும் காலத்தில் உன் பந்துக்களும் தாய் தந்தையாரும், பணியாளரும் சிந்திக்காது உன்னை இகழ்ந்து பேசுவர். கோபிப்பர். உயிர்வதை செய்ய முனைவர். அந்த வேளையில் உனக்கு அருள் செய்வோம் என்று சொல்லி மறைந்தார் சொல்லியவாறு அவன் கண்ணுக்குத் தோன்றாது அவனைப் பற்றிக் கொண்டார்.

## அரண்மனை நிகழ்ச்சி

தினகரன் காலையில் எழுந்து பஞ்சணையிற் தூங்கிக் கொண்டிருந்த தன் பிள்ளைகள் இருவரையும் காணாது இரு கண்களையும் இழந்தவனைப் போல் துடித்தான். அமைச்சர்களை அழைத்து நம் மைந்தர்களை பகைவரோ, பூதமோ, பேயோ, யாரோ தந்திரமாகக் கொண்டு போய் விட்டனர். அவர்களைத் தேடிக் கொண்டு வருவதற்குத் தகுந்த காவலர்களை அழைப்பீர்களாக என்று கட்டளையிட்டான். அரச சபையினரையும் வரவழைத்து உசாவினான். காவலர் சிலர் வளையையும், தடியையும் ஏந்திக் கொண்டு வந்தனர். சிலர் இடையில் உடைவாளைச் சொருகிக் கொண்டும், நெடுவாளை ஏந்திக் கொண்டும் வந்தனர். அரசன் காவலர்களிடம் செய்தியைக் கூறி மைந்தர்களைத் தேடிக் கொண்டு வரும்படி ஏவினான்.

## காவலர் தேடிக் காணல்

காவலர்கள் மலை, செடி, புதர், வானம், நிலம், நீர் முதலிய எல்லா இடங்களிலும் தேடி அலைந்தனர். ஒரு புதிரில் நுழைந்து பார்த்தனர். அங்கு சந்திரவதனன் பாலகனாகிய சாதகனை கூர்மையான வாளால் துண்டு துண்டாக வெட்டித் தலை வேறாகவும், சதை வேறாகவும், ஈரல் வேறாகவும் சிதைத்து குடலை மார்பில் அணிந்து கொண்டு பூஜை செய்வது போல பகவான் மாயையால் காவலர்கள் கண்ணுக்குத் தோன்றியது.

காவலர் சந்திரவதனனை நோக்கி பாதகா உன்னைத் துணையாக அண்டிய பாலகனை சற்றும் அச்சமில்லாமல் துண்டு

துண்டாக சிதைத்து விட்டாயே? நாடு முழுவதையும் நீயே ஆளவேண்டுமென்று நினைத்தாயோ? நன்றியில்லாதவனே என்று சினந்தனர். அடியுங்கள், போடுங்கள், பிடியுங்கள் என்று அதட்டினர். சந்திரவதனன் உண்மை தெரியாமல் தன் பூஜைக்கு அவர்கள் இடையூறு கொடுப்பதாகக் கருதி நான் உங்களை என் வாளுக்கு இரையாக்கி பைரவிக்குப் பலியிடுவேன் என்று சீறினான்.

## காவலர்கள் திரும்பி வந்து மன்னனிடம் அறிவித்தல்

சந்திரவதனன் சொல்வதைக் கேட்டு கோபம் கொண்டு காவலர்கள் விரைந்து சென்று மன்னன் தினகரன் பாதங்களை வணங்கி அரசே பிள்ளைகளை மலை, செடி, வனம் எல்லாம் தேடினோம். ஒரு புதரின் மறைவில் அந்த வேதியர் மகன் நம் இளவரசனைக் கண்ட துண்டமாக்கி குடல் வேறு தலைவேறாகச் செய்து பூஜை செய்து கொண்டிருக்கிறான். நாங்கள் அவனை நெருங்கி ஏன் இப்படி செய்கிறாய் என்று அதட்ட அவன் எங்களை வாளால் பிளந்து தேவிக்கு பலியிடப் போவதாக சீறுகிறான். ஆதலால் சிலரைக் காவலாக அங்கு வைத்துவிட்டுத் தங்களிடம் தெரிவிக்க வந்துள்ளோம் என்றனர்.

## தினகரன் புலம்பல்

சதாகன் பலியிடப்பட்டான் எனக் கேள்வியுற்ற மன்னன் மிகவும் வருந்தினான். கண்ணீர் வடித்தான். மயங்கி வீழ்ந்தினான். விந்துருவை மயங்கி விழுந்த மன்னனைத் தாங்கி காரணத்தை வினவினாள். நம் செல்வமகனை வேதியர் மகன் வாளால் கண்ட துண்டமாகச் சிதைத்து விட்டானாம் என்று விம்மினான். மந்திரி சொன்னதையும் மறுத்து அவனுக்கு முடிசூட்டியது இப்படி தீவினை வருவதற்கோ? என்று விந்துருவையும் கதறினான்.

மகனே கண்ணே, மணியே, விந்துருவை பெற்ற குணக்குன்றே! என் மனக்கவலையை மாற்ற வந்த செல்வமே! என் தந்தையே உன்னை இழந்து நான் எப்படி இனி உயிர் வாழ்வேன் என்று பலவாறு தினகரன் புலம்பினான்.

## பரிவாரங்கள் சூழ தினகரன் வனம் புகல்

செய்தி நகரமெங்கும் பரவியது. மக்கள் பலர் அரண்மனையை அணுகினர். வீரம் பொருந்திய சிலர் அரசனை வணங்கி அந்த வேதியர் மகன் இருக்கின்ற காட்டுக்குச் செல்வோம் புறப்படுங்கள் என்றனர். அது கேட்ட மன்னன் கோபக்கனல் பொங்கும் அந்த வீரர்கள் முன்னே செல்ல சந்திரவதனன் இருக்கும் அடர்ந்த வனத்தை அடைந்தான். சண்பகம், சந்தனம், கொங்கு முதலிய மரங்கள் நிறைந்த அவ்வனத்தில் குளிர்ச்சியான ஓரிடத்தில் சந்திரவதனன் நிலையாக நிற்பதைக் கண்டான்.

## சந்திரவதனனை துன்புறுத்தல்

சந்திரவதனன் பூஜை செய்வதைப் பார்த்தவர்கள் கொடியவனே, பாதகா, பாவி, பழிகாரா உன் தம்பியை வாளாற் கொன்று தீர்த்தனையோ? இவ்வளவா உன் ஆசை இதுதான் பூஜை செய்யும் தன்மையோ? என்று அதட்டினர். ஒன்றும் பேசாது பூஜையே பெரிதென இருந்த சந்திரவதனனை ஏசாதபடியெல்லாம் ஏசினர். பற்றி இழுக்கும் கையையும் காலையும் மடக்கிச் சேர்த்து கட்டினர். அரசன் முன் கொண்டு போய் நிறுத்தி நாங்கள் கேட்பதற்கெல்லாம் ஒன்றும் பதில் பேசுகிறானில்லை. பாருங்கள் என்று சொல்லினர்.

அரசன் கடுங்கோபம் கொண்டு அருகிலிருந்து தச்சனை அழைத்து இந்த கொடியவனை வாய்ச்சியால் வெட்டிக் கொன்று விண்ணுலகம் எழும்படி செய் என்று ஆணையிட்டான். வேந்தன் ஆணைப்படி தச்சன் வாய்ச்சியை சந்திரவதனனை வெட்டுவதற்கு மேலே தூக்கி ஓங்கும் போது ஏழரை நாழிகை தீர்ந்த படியால் சனிபகவான் சந்திரவதனனை விட்டு நீங்கி தன் இருப்பிடம் சென்றார்.

## சதாகன் விழித்தெழுந்து வருதல்

தூங்கிக் கொண்டிருந்த தம்பி, தூக்கத்திலிருந்து எழுந்து அண்ணனைத் தேடிக் கொண்டு அம்பினும் வேகமாக அப்போது

வருவதை அங்குள்ளோர் அனைவரும் பார்த்தனர். சதாகனைக் கண்டதும் தச்சன் ஓங்கிய வாய்ச்சியை நிறுத்திக் கொண்டான். விரைவாக வந்த தம்பி தன் அண்ணனை துன்புறுத்துவதைக் கண்டான். என் அண்ணனைக் கட்டி வைத்தவர்களைக் கண்ட துண்டமாக்குவேன் என்று கோபித்தான். தந்தையை நோக்கி நீங்களும் ஏன் இவ்வாறு பித்துப் பிடித்திருக்கிறீர்கள் என்று சினந்தான். தன் இளைய மகனைக் கண்ட தினகரன் அவனைக் கட்டி தழுவினான். ஒன்றும் புரியாமல் திகைத்தான். துன்புறுத்தப்பட்ட சந்திரவதனை கட்டவிழ்த்து விட்டு எல்லோரும் பூஜை செய்த இடத்துக்குச் சென்றனர்.

## பூஜை நடத்திய இடத்தைப் பார்த்தல்

சென்று பார்க்கும் போது முன்பு சதாகன் உறுப்புகளாகத் தோன்றியவையெல்லாம் அவன் உறுப்புகளல்ல என்பதையும் அவை பூஜைக்கு படைக்கப்பட்ட பொருள்கள் என்பதையும் கண்டனர். துண்டாக்கப்பட்ட சதாகனுடைய தலைபோலத் தோன்றியும் பூசணிக்காய் என்பதையும் ஈரல் போல் தோன்றியது கீரையென்பதையும், இரத்தம் போல் தோன்றியவை எள்ளுப்புண்ணாக்கு என்பதையும் ஏனைய உறுப்புகளாகத் தோன்றியவை பால், பழம் முதலியன என்பதையும் கண்டனர். இவ்வாறு பூஜையின் பாங்கை அறிந்து அரசன் வியப்படைந்தான்.

## சந்திரவதனன் பூஜையைப் பற்றி தந்தையிடம் கூறுதல்

தினகரன் சந்திரவதனனிடம் அவன் செய்த பூஜையின் சிறப்பையும் காரணத்தையும் விளக்கும்படி வேண்டினான். சந்திரவதனன் தந்தையே உம்மை சனிபகவான் ஏழரை ஆண்டுகள் தவறாமல் பற்றி வருத்துவான் என்று சோதிட வல்லுநர்கள் மூலம் அறிந்தேன். அதை மாற்ற அந்த நாள் முதலே பகவானைப் பூசிக்கத் தொடங்கினேன். என் பூஜையை மகிழ்ந்து சனிபகவான் என் முன்னால் தோன்றி நீ வேண்டும் வரமென்ன ? என்று கேட்டார். அதற்கு நான் தாங்கள் என் தந்தையை ஏழரை வருடம் துன்புறுத்தப்

போவதாக அறிந்தேன். அவரை துன்புறுத்தாத வரம் கேட்கவே பூஜை செய்கிறேன் என்றேன். பகவான் நீ சொல்வது உண்மையே நீ என்னைத் துதித்துப் பூசித்தபடியால் அதை ஏழரை மாதமாக மாற்றுவோம் எனக்கூறி மறைந்துவிட்டார். தங்களுக்குப் பகவானால் வரும் துன்பத்தை எப்படியும் மாற்ற வேண்டும் என்று தீர்மானித்தேன். வீட்டிலிருந்து பூஜை, அர்ச்னை முதலியன செய்தால் மனம் ஒரு வழிப்படாது என்ற முடிவு செய்து கானகம் சென்று ஒரு பக்தியோடு பூஜை செய்தேன். சனிபகவான் காக வாகனத்தில் மீண்டும் நேரில் தோன்றி என் பக்திக்கு மகிழ்ந்து உன் தந்தைக்கு ஏழரை மாதத்தை ஏழரை நாழிகையாக்கினோம். அதற்குமேல் ஒன்றும் செய்யமுடியாது செய்தால் என் ஆட்சிக்கு ஊனம் ஏற்படும். ராசிகளின் நிலையும் நட்சத்திரங்களின் செயல்களும் தப்பாகி விடும் என்றார். அதைக்கேட்ட நான் அந்த ஏழரை நாழிகையும் என்னைப் பற்றிக் கொள்ளுங்கள் என் தந்தையை தொடாதீர்கள் என்று மன்றாடினேன். சனிபகவான் அதை ஏற்றுக் கொண்டு மறைந்து சென்றார். அதற்குப்பின் நடந்தது ஏதும் அறியேன். இது தான் உண்மை என்றான்.

## தினகரன் சாகத் துணிதல்

சந்திரவதனன் சொல்லியதைக் கேட்ட தினகரன் தனியாக வேணும் எனக்கு இச்செய்தியைக் கூறவில்லையே என்று வருந்தினான். வாளை எடுத்து இவ்வாளால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன் என்று சொல்லி வாளை தன் தலைக்கு மேல் ஓங்கினான். அந்த வேளையில் சனிபகவான் தோன்றி அப்பா நீ சாக வேண்டாம். இவர்களைப் பிரித்தும் காவலர் கோபம் கொள்ளும்படி பூஜை பொருள்களை தலை, குடல், இரத்தம் முதலிய உறுப்புகளாக மாற்றியதும், சந்திரவதனனை வாய்ச்சியால் துணிக்கும்படி தூண்டியதும் ஆகிய எல்லாம் செய்தவன் நானே என்று நடந்ததையெல்லாம் கூறினார்.

## பகவான் அந்த இடத்தில் தனக்கு கோயில் கட்டும்படி கூறல்

மேலும் பகவான் தினகரனை நோக்கி அரசே இப்போது உனக்குச் சொல்ல வேண்டுவது வேறொன்றுமுண்டு. சந்திரவதனன் மனஉறுதியோடு வழிபட்ட இந்த இடமே எனக்குப் பிரியமான இடம். செண்பகம் முதலிய மரங்கள் அடர்ந்தும், சுரபி நதிக்கரையை அடுத்ததுமாகிய இந்த சோலையிலேயே நான் நிலைத்திருக்க விரும்புகிறேன். ஆகவே முடிசூட்டு விழா முடிந்த பின் இந்த இடத்தில் எனக்குக் கோயில் கட்டி வழிபட்டு வாருங்கள் என்று கூறினார். சனிபகவான் கூறியவைகளையெல்லாம் கேட்ட தினகரன் நன்றென மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டான்.

## சனிபகவானே சந்திரவதனனுக்கு முடிசூட்டல்

பிறகு சனிபகவான் தினகரனிடம் அரசே இன்றே என் கையால் சந்திரவதனனுக்கு முடி சூட்ட விரும்புகிறேன். மணி நகரத்துக்குப் போவோம் என்று கூற தினகரன் பெருமிதங்கொண்டு படைகள் புடை சூழ சான்றோர்கள் உடன் செல்ல பகவானை அழைத்துக் கொண்டு தலைநகரம் சென்றான். மணிநகரம் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியது. செல்வச் சிறப்புடைய வீதிகளும், வாசல்களும் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டன. ஆங்காங்கு கும்பங்கள் வைக்கப்பட்டன. ஆலயங்களிலெல்லாம் ஆறு காலமும் பூஜைகள் நடத்தப்பட்டன. சந்திரவதனனை பொன்னாலும் மணியாலும் ஆன சிம்மாசனத்தில் அமரச் செய்தனர். மன்னர்கள் தலைமேல் கைகூப்பி வணங்க அந்தணர்கள் வேதமோத, முரசு கடலொலி போல முழங்க வானவர் மலர்மாரி பொழிய, பெண்கள் குரவையிட மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட மணிமுடியை எடுத்து சனிபகவான் சந்திரவதனனுக்கு சூட்டினார்.

முடி சூடிய சந்திரவதனன், தம்பி சதாகன், தாய் விந்துருவை, தந்தை தினகரன் ஆகியோர் துணிவோடும், பணிவோடும், மகிழ்வோடும் அரசாட்சி செய்வதைப் பார்த்த பகவான் மனம் பூரித்து மறைந்தார்.

## தினகரன் முதலியோர் சனிபகவானுக்கு கோயில் கட்டுதல்

சனிபகவான் சென்ற பின் தினகான் முதலிய அனைவரும் சந்திரவதனன் சனிபகவானை வைத்துப் பூசித்த இடத்திற்குச் சென்றனர். அங்கு கரிய மேகம் திரண்டு உருப்பெற்று சூரிய ஒளியோடு பிரகாசித்துக் கொண்டு பூமியைப் பிளந்து வெளி வந்ததைப் போல் சனிபகவான் சுயம்புவாகத் தோன்றி பேரழகோடு காட்சியளித்தார். மன்னன் சந்திரவதனன், தந்தை தினகரன், தம்பி சதாகன், அமைச்சர், அந்தணர் முதலிய அனைவரும் பகவானின் திருஉருவத்தைக் கண்டு அதிசயித்தனர். உள்ளம் பூரித்தனர். போற்றித் துதித்தனர். தரையில் விழுந்து வணங்கினர். அந்த செண்பக மரங்களடர்ந்த சோலையில் ஒரு விடத்தலை மரத்தின் நிழலில் பகவான் எழுந்திருப்பதைக் கண்டு அந்த இடத்திலேயே சிறிய கோயில் கட்டினர். அக்கோயிலுக்கு குச்சுப்புல்லால் வேய்ந்தனர்.

செண்பக மலர்கள் கமழும் அவ்விடத்திற்கு செண்பகநல்லூர் எனப் பெயரிட்டனர். குச்சுப்புல்லால் வேய்ந்த அல்லது குச்சுப் போன்ற குடிலில் எழுந்தருளியுள்ள சனிபகவானை குச்சன் என்றும் அழைத்தனர். குச்சன் (சனிபகவான்) குடி கொண்டுள்ள ஊர் நாளடைவில் குச்சனூர் என வழங்கலாயிற்று. (இன்றும் சனிபகவானை குச்சனூரான் என்றும் அழைப்பதைக் காணலாம்.)

## தினகரன் சனிபகவானைத் துதித்தல்

சிவகங்கை என்னும் பெருமையுடைய சுரபி நதிக்கரையில் அழகோடு காட்சியளிக்கும் சனீஸ்வரபகவானை தவவலிமையிற் சிறந்த சந்திரவதனின் தந்தையாகிய தினகரன் தன் பிறவிப்பிணிதீர துதித்து வணங்கினான்.

*கோலமே மிகுந்த வெள்ளிநற் கனிக்குக் கோவகா ரிந்திரன்வெண்தோப்*
*தாபமே நிகருங் கரதல நீட்டச் சாணஎ வெட்டிடா தகன்ற*
*சீலமே நோக்கித் தன்னினை யயர்ந்து திசைப்புறம் தன்னையை தெரிந்து*
*சாலமீ துயரும் வரைக்கரி யருநும் தகையையேசர்சுரபியாயவைபயாய்*

*பகவானை வணங்க மனத்திடை நினைத்து பயத்திடைவாழுமண்டுகய்*
*தொகுதருந்த திரையங் கரத்தினான் மணிகள் சொரிந்திடும்*
*கரபி யாநதியாய்*
*அகலிதர்க் கருநீர்முகையதை அரிவென் றஞ்சியே இரங்குருகிரங்கப்*
*பகாயறப் பேதைக் குருகுதா லாட்டும் பாபறுபாண்டிநாடுடையாய்*
*பங்கையன் பரமன் பாற்கடல் துயின்றோன் பண்ணவர்*
*அனைவரும்கூடிப்*
*பொங்கயாய்ப் புகழும் சென்பக நகரில் பொருந்திய பெருஞ்*
*சிறப்புடையதாய்*
*துங்கமா மாடன் இருளன் பேய்ப்பூதத் தோடிய தகற்றி எவ்வுயிர்க்கும்*
*மங்கல மருளி மதுகர நிறைசேர் மணத்தசெவ் வலரிமாலையினாய்*
*வித்தான வனியலவோ விரிவாம்*
*எத்தேவரும் உன்னருள் வேண்டுவராய்*
*சித்தேஉயர் செண்பக மாநகர்வாழ்*
*முத்தே பணி மோனசிகாமணியே*

சனீஸ்வரபகவான் தம் பக்தராகிய முத்துவேள் அவர்களும் அவர் தமையனாராகிய சோணைவேள் அவர்களும் வழிபடுகின்ற குச்சனூர் கோவிலில் அமர்ந்து கொண்டார். தம்மை வணங்கும் பக்தர்களுக்கு சுகவரம் அருளினார்.

குச்சனூர் அருள்மிகு சனீஸ்வரபகவானின் தல வரலாற்றையும் பெருமையையும் புலப்படுத்துகின்ற தினகரன் மான்மியம் என்னும் இச்சீரிய நூலை இயற்றும்படி திரு.**முத்துச்சாமிக் கவிராயரவரர்களைக்** கேட்டுக் கொண்டவரும் இந்நூல் எழுதி முடிக்கும் வரை வேண்டிய வசதிகள் செய்து கொடுத்தவரும், நிறைவேற்றியபின் நிறைய பொருள் உதவி செய்து அவரை மகிழ்ந்தவரும் தமிழ்ப்புலமையுடையவருமாகிய மேதகு. **பூ.தி.முத்துப்பிள்ளை** அவர்களும் அதற்கு உறுதுணையாக இருந்த அவர் தமையனார் திருமிகு. **பூ.தி. சோனையாபிள்ளை** அவர்களும் தற்போதுள்ள கோவில் பரம்பரை அறங்காவலர்களின் முன்னோராவார். தம்மை ஆளாக்கிய சடையப்ப வள்ளலை கம்பபெருமான் இராமாயணத்தில் இடையிடையே பாராட்டி தம் நன்றிக்கடனை தெரிவிப்பது போல இக்கவிராயர் அவர்களிருவரையும் நூலின் இறுதியில் வெகுவாகப் பாராட்டித் தம் நன்றியைப்

புலப்படுத்துவது கவிராயர் அவர்களின் பெருந்தன்மையைக் காட்டுகிறது.

புலவரவர்களின் பாராட்டை நோக்கும் போது அவர்களிருவரும் சனிபகவானின் திருவடித் தொண்டர்களே என்பதும் திருமால் பக்தர்களென்பதும், வள்ளல் தன்மையுடையவர்களென்பதும் அறநெறி தவறாதவர்களென்பதும் தீரமுடையோர்களென்பதும் தெற்றனெத் தெரிகிறது.

**வாழ்க பகவான் நாமம்.**

## திருப்பணி நடந்து முடிந்த விபரங்கள்

- ✣ மூலஸ்தானம் விமானம் கட்டியது முன்னாள் நிர்வாக அறங்காவலர் லேட். திரு. பூ.தெ. **முத்துக்கோனேரி திருமலைப்பிள்ளை,** நிதிவசூல் செய்து கட்டி முடித்தார்.
- ✣ முன் மண்டபம் லேட். திரு. பூ.மு. **முத்துக்கோனேரிபிள்ளை** நிர்வாக அறங்காவலராக இருந்த காலத்தில் லேட். திரு. **பி. ராமதாஸ்** கலெக்டர் அவர்களிடம் நன்கொடை பெற்று கட்டி முடிக்கப்பட்டது.
- ✣ முத்து விநாயகர் கோவில், திருமலைக்குமரன் கோவில், நாகர் கோவில், கன்னிமார் கோவில், கொடிமரம் மற்றும் பீடம், மூலஸ்தானத்தின் நான்கு புறமும் பாவுகல் பாவியது. மூலஸ்தானத்தின் மூன்று புறங்களில் திருமதில் கட்டியது, முன்மண்டபம் அபிவிருத்தி வேலை செய்தல், தென்வடல் திருமதில், மடப்பள்ளியிலிருந்து கிழக்கே திருமதில் கட்டியது, மகளிர் உடைகள் மாற்றுமிடம் கட்டியது, அர்த்தமண்டபம் கட்டியது ஆகிய திருப்பணிகள் திரு. **எம். முத்துச்சோனை** நிர்வாக அறங்காவலராக இருந்த போது முடிக்கப்பட்ட திருப்பணிகள் ஆகும்.
- ✣ திரு. **தெ. கருப்பையா** பாரம்பரை அறங்காவலர் அவர்களால் சோனைக் கருப்பணசாமிக் கோவில் மராமத்து செய்து திருப்பணி செய்தது.
- ✣ திருக்கோவிலுக்கு முதல் முறையாக மின் இணைப்பு செய்ததும், வாய்க்கால் கரையில் வடபுறம் விநாயகர் பீடம் அமைத்து பிரதிஷ்டை செய்தது கம்பம். திரு. **என்.கே.டி. திருமலை ராசுப்பிள்ளை** அவர்கள்.
- ✣ ரதக் கொட்டகை கம்பம் திரு. **என்.கே.டி. முத்துக்கிருஷ்ண பிள்ளை** அவர்களால் கட்டிக்கொடுக்கப்பட்டது.
- ✣ ராஜவாய்க்கால் கரையில் தென்புறம் விநாயகர், பிரதிஷ்டை செய்தது மேல்நிலைத் தண்ணீர் தொட்டி கட்டியது திரு. **எம்.எம். திருமலைமுத்து** நிர்வாக அறங்காவலராக இருந்து போது செய்யப்பட்டவைகள்.
- ✣ கோவில் வெளி வளாகத்தில் வாய்க்கால் படித்துறை அபிவிருத்தி செய்தது திரு. **எம்.எம். திருமலைமுத்து** நிர்வாக அறங்காவலராக இருந்த காலத்தில் நன்கொடை மூலம் செய்யப்பட்ட பணி.
- ✣ திரு. எம். **முத்துச்சோனை** நிர்வாக அறங்காவலராக இருந்த காலத்தில் நவீனக் கழிப்பிடம் கட்டப்பட்டது.

உ

ஸ்ரீ மதேராமானுஜாய நம

# தினகரன் மான்மியம்

குச்சனூர் வில்லேஜ் முன்சிபு மகா ஸ்ரீஸ்ரீஸ்ரீ

**பூ.தி. முத்துப்பிள்ளை** அவர்கள்

கேட்டுக் கொண்டபடி

சிவகரி சமஸ்தான வித்துவான் மகா ஸ்ரீஸ்ரீஸ்ரீ இராயகிரி

**மா. அ. முத்துச்சாமி கவிராயர்**

அவர்களால் இயற்றப்பட்டு

குச்சனூர் சனீஸ்வர பகவான்

ஸ்ரீ தேவஸ்தானம் தர்மகர்த்தா மகா ஸ்ரீஸ்ரீஸ்ரீ

**பூ.தி. சோணையாபிள்ளை**

அவர்களால் பதிக்கப்பட்டது.

திண்டுக்கல் மகா ஸ்ரீஸ்ரீஸ்ரீ

**ஆ. முத்துச்சாமி**

அவர்களது நேட்டிவ் ராயல் அச்சாபீசில் பதிக்கப்பட்டது.

1905

## சாற்றுக்கவிகள்

ஸ்ரீ உ.வே. ஸ்ரீ. நிவாசய்யங்கார் அவர்கள் இயற்றியது

தகர கும்பக் தனித்தரிவை யாழ்சிலைமீன் நட்பெனவுட் சார்ந்து தாமப்
பக்ர கும்பக் கரியரியொண் பணிநளிவேந் தெறுக்கான் மெய்ப்பகையாய்
நாடு நிகரகும்பற் கதிர் கடவுள்நிறை மகிழ்வாய் தருங்காலாய் நிகரில்
சீர்மை
மகரகும்பத் தனியங்கள் ஆட்சியெனக் கோளூறுங்கோன் மாட்சி
தன்னால்
தினகரன் நேர் மிகுதியான தமிழ்க்கலைகள் ஒருங் குணருந் தகையான்
விண்டே
வனகரநேர் மணிநகரான் வாய்மைபொறை மதியருண்மெய் வயங்கு
வானவிற்
பனகரநீள் தருவனையான் பளகறுசெய் கோற்றாலைமை பரித்தோன்
செல்வத் தினகரன் றுயர்மகிமை சேர்க்கையொண் பாவினமாய்ச்
செய்க வென்னா
வலங்கருதுந் தமிழ்கலையின் மாண்பொருங்கு தெரிதருநா வலர்மே
லன்பு நலங்கருதுஞ் சுகுணசுக நயவமுத மனையவுரை நவலுங்
கோமான்
உலங்கருதுந் திரள்புயத்தான் செண்பகநல் லூரறையும் உசிதன்
வாய்மை
புலங்கருதுங் கருணை முத்துப் புரவனாய்த் துரைத்திரமெய்ப் புளகங்
கொண்டே
எழுத்திசையும் பொருளிசையும் அணியிசையும் இயலிசையும்
இயக்கி யாரும் வழுத்திசை கொள் அதிமதுர வாக்கிசையும் படிபுரிந்து
வழங்கினான்சீர்
முழுத்திசையும் புகழுகார் சிவகிரிமாட் டுயர் வளங்கொண் முகன்
சேர்ந் தின்பம்
பழுத்திசைசே ரோரறுகால் பயில்பொழில்சூழ் ராயகிரிப்பவந துற்றோன்
திருமாடன் புறங்காவியான் தீயர்தம திடங்கவியான் நிகழுஞ் சீர்த்தி
வருமாட சாமிமுகில் வரோதயணன் னூலொருங்கு வடித்துத்
தேர்ந்தேன்

*குருமாட நிரைவனஞ்சால் கோபதியின் கொடிக்கணவன்*
*குகவேல்பிள்ளை பெருமாடன் அருள்மருவும் ஞான்முத்துச்*
*சாமியெனும் பெயர்க்கோமானே*

அனுமந்தன்பட்டி அ.சு. கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் இயற்றியது

*செண்பகநல்லூருறைத்திடும் புனிதன் திருவளர் முத்துமா மகிபன்*
*நண்பகட் டெழிலார் அகத்தியன் பயந்த நலம்பழு நியதமிழ்ப் பாவாற்*
*பண்பக மேவுந் தினகரன் கதையைப் பகரெனப் பாடினான் குகவேள்*
*தண்பகக் கழவை வழுத்திடு முத்துச்சாமியென்றோதுநா வலனே*

## வெண்பா

*முத்து மகிபன் மொழி கென்னச் செய்தளித்தான்*
*சித்திபெறுஞ் செல்வத் தினகன்சீர் - வித்தகநற்*
*சாமிகவின் தாள்துதியைச் சந்ததமும்*
*போற்றுமுத்துச் சாமிகவி நாவலவன்றான்*

அனுமந்தன்பட்டி மதுரகவி ஸ்ரீ உ.வே. ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள் மாணக்கர். குச்சனூர் சோதிடம் பெ.சு. சேஷய்யங்கார் அவர்கள் இயற்றியது.

*திருப்பாவை யருள்பாவை குழல்மாவை தலையணிந்து திகழும்பூமா*
*திருப்பாவை கியமார்பன் கழல்பணியு முத்துவள்ளல் செப்புகென்னத்*
*திருப்பாவைக் குதற்கணியும் இராயகிரிப் பதியுற்றோன் தீயர்மீது*
*திருப்பாவைக் குகற்கணியும் இராயகிரிப் பதியுற்றோன் தீயர்மீது*
*திருப்பாவையிதயமுத்துச் சாமிசொற்றான் தினகரன் சீர் சிறக்க மன்னோ*

கம்பம் M. சாமாண்டிபிள்ளை அவர்கள் இயற்றியது

*பந்தனந்தந் தனைவென்ற முலைநடையோ டிடைமருவு பாவைமார்கள்*

*கந்தனந்தந் தரிந்தவர் கேசவநா ராயணன் பொற் கமலத்தாட்குந்த*
*தந்தனந்தந் தனவெனநிர்த் தனம்புரியுங் கடவுளுக்குஞ் சரியாய்ப்பூஜை*
*வந்தனந்தத் தனுதினமும் வணங்கமுத்து மகிபாலன் வழுத்துமன்னோ*
*கும்பனனுமானனெனவெக் கலையுமறி புலவர் புகழ் குமுணயோக*

*சம்பணன் சித்திரக்கவிஞன் முத்துச்சாமிப் பெயரோன் றமிழ்ப்பாக் கண்டு*
*கம்பனம்பாவும் பழையதெனும்படி சொல் தினகரன்ற கதையைக் கேட்டே*
*தம்பனம்செய் துயர் சேடன் கீழாகித் தரைசுமந்து தவஞ்செய்தானே*

மதுரகவி உ.வே. ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்கள் மாணாக்கர் அனுமந்தன்பட்டி கோ. அந்தோணிமுத்துப்பிள்ளை அவர்கள் இயற்றியது

*தார்மணக்குந் தினகரன்றன் சரிதமைத் தரணியுள வரையுமென்றன்*
*பேர்மணக்கும் படிதமிழாற் பாடுகென முத்துவள்ளல் பெட்பிற்கேட்க*
*சீர்மணக்குங் கொடைமுத்துச் சாமிநா வலனதைச் செய்யுள்ளாகப்*
*பார்மணக்க விண்மணக்க நாமணக்கச் செவிமணக்கப் பகர்ந்தான்*
*மன்னோ*

அனுமந்தன்பட்டி ச. சுப்பாநாயுடு அவர்கள் இயற்றியது

*வனசமென் மலரா ளருளெனப் பொலிந்த மணிநகரத்தினுக் கரசாந்*
*தினகரன் புதல்வன் றனக்குறு மின்னல் தீர்த்திடுஞ் செண்பகநல்லூர்ச்*
*சனிபகவான்றன் பெருமையை முத்துத் தாமவேள் சாற்றெனச்*
*சொற்றான்*
*றினிமைசா வருமைத் தமிழ்த்தெரி முத்துச் சாமியென்றொதுநா வலனே*

மதுரகரி ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள் மாணாக்கர் அனுமந்தன்பட்டி நா. சோத்திரிநாயுடு அவர்களியற்றியது

*செண்பகநல்லூர்புகழுந் தினகரன்றன் மான்மியத்தைத் தெரிந்ததேர்ந்து*
*பண்புறு செந் தமிழ்ப்பாவாற் பாடுகென முத்துமகி பதியுரைக்க*
*நண்பமைசுப் பிரமணியன் நளின் மலர்ச்சரண்பணிந்து நவின்றான்மன்னு*
*மெண்புவியிற் புகழ்பெருகவளர்பெருகவளர்முத்துச்சாமியெனும் இசைவல்லோனே*

மதுரகவி ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள் மாணாக்கர் அனுமந்தன்பட்டி சு.கு.வெங்கிடசாமி அவர்கள் இயற்றியது

*தினகரற் குயர் பூஞ்சோலைச் செண்பகநல்லூர் தன்னைத்*
*தினகர னாக கொண்ட சனிபகவானாற் சீர்சால்*
*தினகரன் மான்மியத்தைச் செப்பினன் முத்துச்சாமி*
*யெனவர கவிஞர் போற்றும் இருந்த மிழ்க் கலைவல்லோனே*

கம்பம் சின்னத்திருமாலையப்பபிள்ளை அவர்கள் இயற்றியது

தினகரனே ரெனவவிரு மாழிசங்கத் தனுத்தண்டந் திகழவேயேந்
தினகரனென் பரன்கரியோன் திருவடிக்குத் தாசன் முத்துச்செல்வன் வேண்டத்
தினகரனென் றுயர்பெயர் மென்றிருக்கதையைப் புலவர்செவிக் கமுதாய்தின்பு
தினகரஞ்சே ரயில்வேலற் பணிமுத்துச் சாமிவள்ளல் செம்பினானே

கம்பம் உத்தமபுரம் கிராமக் கர்ணம் அ.சி. கோனேரிதிருமலையப்பிள்ளை அவர்கள் இயற்றியது

காராளர் குலதீபன் எனதருமைச் சகோதரன்வெங் கரிசொன்றில்லான்
சீராளன் கவிவலவர் மாட்சியறி முத்துவள்ளல் செப்புகென்ன
பாராளுந்தினகரன்றன் மான்மியத்தைச் செந்தமிழின் பாவினாலே
நீராளுங் கடலுலகிற் றிகழ்முத்துச் சாமிமுகில் நிகழ்த்தினானால்

கோம்பை நகரம் க. திருமலைசக்கைய கவுண்டர் அவர்கள் இயற்றியது

அனகரமான் மதியறுகு கூவிளமா ரார்சடையார் கண்டதீதர்
சினகரமான்றோர்ம னமாயுரைபரம னருள்மிக்குத் திருமேவுங்குச்
சனகரமான் மிகமுத்து மகிபன்வேண் டிடமுத்துச்சாமி சொன்ன
தினகரமான் மியங்கேட்கில் வாணியும்யான் பேதையெனச் செப்புவாளே

அனுமந்தன்பட்டி மதுரகவி ஸ்ரீ நிவாசய்யங்காரவர்கள் மாணாக்கர் கம்பம் உபாத்தியாயர் வீ. முருகப்பிள்ளை அவர்கள் இயற்றியது

தந்தனஞ்செந் தமிழ்ப்பாடு நாவலவர்க் கெனவருளுந்தனதன்யோக
பந்தனன்சண் பகநல்லூர் வருமுத்து மகிபாலன் பகரப்பாடித்
தந்தனனென் றுயர்முத்துச் சாமிகவி தினகரன்சீர் சாற்றக்கேட்டு
வந்தனனென் றுயர்கும்ப வரதனுமே மனமிகவு மகிழ மாதோ.

## வெண்பா

மன்னுபுகழ் முத்து மகிப னியற்றுகெனச்
சொன்ன தினகரன்சீர் செயற்கையாற் கண்ணல்ரச
மென்னத் தமிழா லியற்றினான் ராயகிரீ
மன்னுமுத்துச் சாமிகவி மால்

தேவாரம் ஜமீன் கார்பார் பழனிக்குமாருபிள்ளை அவர்கள் இயற்றியது

*அனநடையார் மடலெழுத்து மதிரூபன் குச்சனூர தனில் வாழும்*
*கனமெனவே பாவலர்க்கு நிதியருளு முத்தரிபன் கனிந்த சொல்லாற்*
*றினகரன்றன் மான்மியத்தைச் செந்தமிழாற் சந்தமுறச்செப்பென்றோத*
*மனமகிழ்ந்து கவிமுத்தச் சாமிகுரு முனிவியக்க வழுத்தினானே*

கோட்டையூர் மாணிக்கமாசாரிப்புலவர் அவர்களியற்றியது

*தினகரன்றன் சரிதை கடல்வளைபுவிநா வலர்க்கினிய தேனாமென்னக்*
*கனகரத்ன பூஷணதிண் புயமுத்துப் பிள்ளையெனுங் கனவான் கேட்கப்*
*பனகரப்பெம் மானிகர்வோன் முத்துசாமிப்புலவன் பளகில் வாய்மைச்*
*சினகரத்தின் மகிமையான சிராயகிரிப் பதியுறைவோன் செப்பினானே*

அனுமந்தனகரம் மதுரகவி ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள் மாணாக்கர் ஹிந்து ஸ்கூல் மாஸ்டர். ரா. முத்துப்பிள்ளை அவர்கள் இயற்றியது

*துங்கரவி மான்மியத்தைச் செந்தமிழாற்பாடுகெனத் துவங்குஞ்சீர்த்தி*
*கங்கைகுல திலகனெனு முத்துமகி பதிகேட்கக் கவிஞரெல்லா*
*மிங்கருள்வாக் கெனமதிக்கப் பகவனெனக் காபரணமென்றே சாற்ற*
*மங்கலநா வலன்முத்துச்சாமிவேள் கவித்தொடையாய் வகுத்தான்*
*மன்னோ.*

மதுரகவி ஸ்ரீநிவாசய்யஙகாரவர்கள் மாணாக்கர் குச்சனூர் ஸ்கூல் மாஸ்டர் ரெ. ஆறுமுகப்பிள்ளை அவர்களியற்றியது

*வல்லமுத்துக் களைத்தடுக்கு மன்னுதின கரன்சீர்த்தி மகியிலெங்கும்*
*செல்லமுத்து மாரியெனச் செந்தமிழாற்பாடெனவென் சிநேகமாக*
*நல்லமுத்து வள்ளலெனச் நானிலங் கொண்டாடியநன் னாமனன்பாற்*
*சொல்லமுத்துச் சாமிசெல்லும் தொடையதனைச் சொல்லெனவே*
*சொல்லவாமே*

*தினகரன்வந்தன் வரவைவற்செருத்துச் செனத்தளோ ருயர்தரவமர்யோ*
*தினகரனுயிரை வாட்டிய திறலோன் திருவடி மனத்தினன் விண்மீ*
*தினகரன் சிவனு முத்துமாமகிபன் செய்கெனச் செய்தனன் பாவால்*
*தினகரன் கதையைத் திகழ்முத்துச்சாமி திருந்திய கலையுணர்திறனே*
*சீர்கொண்ட தண்டலையி னூடுதலும் வெண்பிறைத் தென்கோடி*
*றாலினூற நற்*
*றேனருவி பாய்ந்திடச் செந்நெலொடு கன்னல்கள் செழித்து*
*முப்போகம் விளையும்*
*செண்பகநல் லூரில் வளரம்பகவனடியினைச் தைதனினாளுமறவாச்*

சித்தசனையொத்தவின் முத்தையக் குரிசிலுந் திருமருவுசோனை
முகிலும்

ஏர்கொண்ட வாசுமதுரஞ்சித்ரவித்தார மென்னு நாற்கவியினெழிலா
ரின்பமிகு தமிழருமை கண்டுகவி வாணருக் கிருநிதிய ளிக்குமதவே
ளித்தல மெலாம்புகழு முத்துமா மகிபனுமிலங்குமட வார்கள் மடலு
ரினையின் மத னணையதிரு மலைமுத்து டன்சுகுண விந்திரண்
தெய்வமுத்தும்

வார்கொண்டிலங்குசித் தாமணி யெனக் கொடை வழங்கு
வெள்ளையப்பூமனு

மதியுகி யாஞ்சதா சிவமாலு மவைகூடி வாழ்ந்துவரும் நாளிலொருநாள்
வளமைமிகு ராயகிரி வித்துவான் முத்தமிழ் வடிக்குமுத்துச்சாமிமால்
மனிவதன நோக்கியே யீசனருள் மேவுரவி மான்மியத்தைச்
செய்யுளாய்த்

தேர்கொண்ட இரவிமதி யுள்ளநா சீர்த்தியிவனிலைநிற்கவே
செய்கவென யாவரும் உய்யும் படிக்குவரு தேவாமிர் தத்தினுடனே
செந்தமிழ் மாரியுங் கலந்தே பொழிந்ததெனத் திடமதுரவாக்கிதுவெனச்
சேடனு மகிழ்ந்துதன் கிரகம்பி தஞ்சியச் செப்பினான் சிந்தைகூர்ந்தே

தவாரம் ஸ்ரீ.உ.வே. செல்லமய்யங்கார் அவர்களியற்றியது

திருமாலை யருள்குரவ னாதியடி யார்தம்மைத் திருவாழ் மார்பத்
தொருமாலை சந்ததமு மகத்திருத்தி நலஞ்சான்றோ னுலவாத்துன்பக்
கருமாலை யறவொழித்தோன் றருமநிறைகலமானோ ன்கரிசொன்
றில்லான்

றருமாலை வளங்குலவு சண்பகநல் லூரர்ப்தியான் றயாவின் மிக்கான்
திருமலைமுத் தேந்திரன்றன் வரத்துதித்தோன் தனதனிகர்
செல்வக்கோமா

னுருமலைபூ மலர்நிறைகோ ணிகர்தகையா
னுற்றவர்கட்கு தவுங்கையாண் வருமலைவா ரிதி சூழும்
வையகத்துக் காராளர் மரபின்றீபம்
தருமலைவில் சோணைமுத்துப் புரவலன்பின் னோன் முந்துத்
தாமனாய்ந்தே

நின்பெயரு மெபெயரு மிரவிமதி யுள்ளவரை நிலைத்துநிற்ப
முன்புனிக ரற்றதனிச் செந்தழின் பாவதனான் முதுநீர்வைய
மின்புறுநல் வைணவபு ராணமதி லியைந்தோங்கியிசைசான் மாட்சி
யன்பமையும்யுந் தினகரன்றன் மான்மியத்தை பண்புற
நீ யறைகவென்ன

தினகரனே ரெனவிரும்பல்பணி பூண் டேறுகைத்துத் திகழுமானேந்
தினகரன்றாள் பணிமாட சாமிசுதன் தருப்பொலிந்த செல்வ விண்மீ
தினகரன் போல் வளமுற்றோ னீராயகிரிப் பதிவாசன் சிதைவில் திண்பு
தினகரஞ்சே ரயில்வேற் பணிமுத்துச் சாமிவள்ளல் சிந்தை கூர்ந்தே
இக்கனைய வக்கதையை சகாப்தமா யிரத்தெண்ணூற்றிருபத்தாறின்
மிக்கபுகழ் சிம்மமதி தனிற்றசமாம் வழுவீட்டி விளங்கும் பத்துத்
தக்கவழகுற நாட்டிக் கவிவலவர் செவிக்முதாய்ச்சாற்றிமேலோர்
பக்கமுறு மிசைபரப்பி யினி துயர்ந்தா னலைகடல்சூழ் பாரின்மன்னோ

உ

## ஸ்ரீ ராமஜெயம்

## காப்பு

### விநாயகர்

1. நீர்வளமருவுஞ்சோலைநிறையெழிற்குச்சனூரில்
பார்புகழுந் திடுங்கரகேச பகவன தருள் பெற்றோங்குஞ்
சீர்தரும் சிறப்புச் செங்கோற் றினகரன் சரிதைகூற
வாரண முகத்தான் பொற்றாள் மலரடி சென்னிவைப்போம்

### வேறு திருமால்

2. வளையொடுசக்கரந்தனுசுவாள்கதாயுதங்கரத்தில் வயங்கயாணர்த்
துளைபடுவேய்ங்குழலினிசைதேனெனத்தேனினஞ் சூழ்ந்து
தொடரவூதி
யுளைவுறு பூதகியி னமுதுண்ட புகழ்கொண்டு புவியுகந்து போற்றும்
விளைவுறும்பேரொழிற்கமலவிழியானை விழைந்து
பலவினைகடீர்ப்பாம்

### சரஸ்வதி

3. தருப்பொலிந்த செண்பகநல்லூரெனச்சொல்
குச்சநகர்தனிலெந்நாளும் விருப்பொடுவந்தருள்புரியஞ்
சனிபகவான் சரிதமதைவிளம்பமேவித்
திருப்பொலியுமதுரிதநற்கவியெனதுநாவி ஸ்வரச் செய்வாள்
செந்தேன்
மருப்பொலியிந்தவளசரோ ருகமலர்வர யிலகுகலை வாணிமாதோ

### முருகன்

4. மந்திர பஞ்சாட்சரமுஞ் சடாட்சரமாய் வரவுதித்த மயிலோயன்பர்
புந்தி யகலாதுவசித் தனவரதங் கவிமாரி பொழிவாய் திவ்ய
கந்தமிகுந்திடும்பொழில்சேர்குச்சநகர்ச்சனிபகவான்
கதைக்கென்னாவில்
வந்தருள்வாய் தந்திமுக வள்ளல்சகோ தர முருகவடிவேலோனே

## சோனை முத்துக்கருப்பணன்

5. கருங்கச்சைச் சல்லடமுங் கைதனில் வல்லயத்தோடு கதிர்வாளேந்தி
மருங்கச்சு வணத்தினுறு மணிச்சலங்கை கலிலென
மகிழ்வாய்ப்பார்த்தோர் நெருங்கச்சந் தவிர்த்திடநீர் தனப்
ரவிதனிலேறி நீவந்தாள்வாய்
சிருங்கச்சே வலன்மகிழுஞ் சோணைமுத்துக் கருப்பண
வென்றேவதேவ

## வேறு சபையார்

6. வேதம் பெருகத் தினகரன் மான்மியமும் பெருக விளங்குமனு
நீதம் பெருகக்குச்சனகர் நிமிலன் சனீச்சுரன் சரணப்
போதம் பெருகத் துதிமுத்து பூமன்பெரு கவந்தமர்ந்த
நாதம் பெருகும் அடியவரின் நளின மலர்த்தாள் சிரத்தணிவாம்

## வேறு அவையடக்கம்

7. வாரி நீரமை வாய்மடுத் தாலது
சீரிதாமெனல் தேர்கிலார் யாவரே
நேரிவாதவென்பாவுநன் னேர்மையோர்ச்
சேரினற்கவி யமாமெனச் சேருமே

## வேறு நூல்
## குலிங்க நாட்டின் சிறப்பு

8. கோவமாமுகில் தினகரன் புகழெனக் குவலிச்
சாலவான்படிந் தகன்றுபோய்ச் சலதிநீ ரருந்தி
காலனேர்பகை மேலவன் மனங்கறுத் ததைப்போ
னீவமானிற மியைந்து மெலெழுந்தது நிவந்தே

9. வெற்றிசேருநற் றினகரனணியென மின்னி
மற்றவன்படைக் கடலென வானிடை யதிர்ந்து
கொற்றமால்வரை பொருந்தி யன்னவன் மனங்குளிர்ந்து
கற்றவர்க்கரு ளிதியெனக் கனமழை பொழிந்த

10. தூயமுத்துக ளோடுமஞ்க சொரிதெடுந் தூநீர்
சேயநன்முடித் தினகரன் மலையெநனுந் தேவை
மேயவானதின் மேக வாகனன் மன மகிழ்ந்து
பாய்திரைக்கங்கை கொணர்ந்து நீராட்டுபான்மையதே

11.பொழிந்தநீர் புவிபரவி நற்புயங்க மாமணியுந்
துளிர்ச்சந்தன மரத்தொடு சுவைதரு கனிகள்
வழிந்த தேனுடன் மகரந்த மான்மத மளாவிக்
குளிர்ந்தநன்மகோ ததியினிற் குலாவிய தன்றே.

12. பார்மகிழ்ந்து போற்றிடும் சிவகங்கையின் பழனம்
ஏர்மலிந்திடு தடாகநற் குளங்களுக் கினிதாய்
நீர் நிரம்பிடத் திகழ்ந்துநற் செகதல முழுது
மார்வம் விஞ்சிட வமுதெனப் பரந்தது வன்றே

13. மள்ளர் செய்யதில் வரம்பிடு மோதையு மகிழ்ந்து
துள்ளி யார்ப்புறு கடைசியர் குரவையுந் துளங்க
வள்ளி வாய்நறுங் கமலநன் மலரிடை அன்னப்
பிள்ளை நற்றுயி லெழுந்துபின் பெயர்ந்திடு மன்றே

14. இருப்பி னாமையோ டடிசிற் பாத்திரமென வியையத்
திருப் பனைப்பணைந்து முத்தன்னமாய்ச் செய்து
மருப் பொதிந்தசெய் மலரினைக் கறியென வனைந்து
விருப் பமாய்விளை யாடுவார் பட்சிறார் விழைந்தே

15. புவன மேவு மான் வளைகள் போர்புரி சினத்தாற்
கவனமாக நற்கழனிசேர் கந்தியிற் றாவத்
திவளுமாமிட றொடிந்துமுத் தெனுமழை சிதறி
தவளமாவொளி தவழ்தருஞ் சசியெனத் தழைந்தே

16. செய்யதேமாவின் கனிதருரசமுந் தேங்கதலிக் கனிரசமும்
மையாளாவியநற் பலாக்கனிரசமு மற்றுள மதுக்களுங் கூடிச்
செய்யதிற் பரவித்திகழ்பயிர் வளர்த்துச் செந்நெலுங் கன்னலுர்ந்திகழ
வையகமதனி வதிகநல்வளமாய் மலிந்தது குலிங்கநன்னாடு

17. மாதவரெளியோ ராதுலர்களுக்கு மனமகிழ்ந்திட வனமருளி
நீதிசேர்கலைகள் பழகிமாமறையி னெறி தவறாதவர்க்கிடமாய்
காதலர் தம்மோ டுடியேநீத்த கன்னியர்கலனணி களுலுஞ்
சோதி சேர்மணியார் மாடநல்வீதி துலங்குறுங் குலிங்க நன்னாடே

18. செந்நெல் கன்னலாய்த் திகழ்தரக் கன்னலுங் கமுகிங்
றுன்ன நற்கமு கணிதிகழ் தென்னைபோற் றுலங்கிப்
பொன்னுலாவிய தென்னைவான் பந்தரைப் பொறுத்து
மன்னி நாட்டிய காலென வயங்குமா மருதம்

19. பரிதி தேரினிற் பூட்டிய பச்சைவான் பரிகள்
அரிய வெம்பசிக் கயிலுவ வரித்தளிரதனை
யுரிய நன்மகப் புகையினை வானிடை யுலவங்
கரிய வாறென நடித்திடு மெழில்மயிற் கணங்கள் மணிநகரத்தின் மாண்பு

20. பாமகட்கு வெண்டாமரை மலரெனப் பரந்த
பூமகட்குறை யரங்கெனப் பொழியுந் தென்புகழாந்
தேமகட்கணி யணியெனச் சிறந்த தொல்புவியா
மாமட்கணி திலகமா மெனமணி நகரம்

21. இடங்கா தங்கிடு மகழியில் வீழ்பக ரிணைந்து
மடங்கி மீளுவ தரிது மாதவனை மாதவனை
இடங்கொள் நெஞ்சில் நாணுபவர் துயர் நரகத்
தடங்கி மீளுவதரிதரி தாகிடு மற்றே

22. விந்த மேருவின் விண்ணிடை நிவந்தலொண் புரிசைச்
சந்த மார்நெடு வாயிலிற் புகுந்தெழுந்த தபணன்
இந்தி ராகுகே துண்டுமிழ் காலையினிலகு
மந்த மாமெனப் பொலிதரு மலைவுடைத்தன்றே

23. பொன்னு நன்மணி மாலைசந்தனம் புனுகுடனே
துன்னு மான்மதங் கழைகுழை கும்பமுந் துலங்க
வுன்னுங் காதலர் வரவுபார்த் துவந்தினி திருக்கு
மன்னுங் கற்பினா ரொத்தன மணிநகர்வீதி

24. நீல மானிற வாயசப் பரியினர்த் தனஞ்செய்
கோலமாதவன் மலரடி குறுகினர் குணம்போன்
மாலை சேர்மதி யுதித்திட வண்ணிலா மணியின்
சீல மாளிகைப் புலனது சிறந்திட மன்றே

25. மங்கலத்தொலி மறையொலி மாதவரொலியுஞ்
சங்கலம்புகைத் தையலரின் னிசையொலிபு
மங்கண்வேழமார்த்தெழுமொழி யதிர்முர சொலியு
மங்குலாமென முடுமுங்குறு மாமணி நகரம்

### வேறு தினகரன் சிறப்பு

26. அன்னபொன் மாநகர்க் கரச னாகிய
மன்னவ னீதிநூன் மறை திறம்பிடா
னன்னய வையக நண்ணு மாந்தர்கட்
குன்னிய தாயென வுதவு மாட்சியான்

27. நவ்விசேர் விழியினர் நயக்கு மன்மதன்
றிவ்விய மகத்தினிற் றேர்ந்த விந்திரன்
றவ்விய வலைகடற் றரணி வேந்தர்கள்
செவ்விசேர் மணிமுடி திகழுந் தாளினான்

28. திறம்பிடா மொழியது தெய்வத் தாயென
வறம்பெருந் துணையென வணுகுந் தோழனை
நிறம் பெறு கருணையாய் நிறுத்தி மோதினி
மறம்புகு தாவணம்புரக்கு மாட்சியான்

29. ஆறிலோர் பங்குநற் றிறை யமைத்தலான்
மாறிடா மாரியும் மாரி பெய்திடுந்
தேரிய நல்லறஞ் சிதைவி லாமையான்
மீறிடுமருண்மனு நீதி வெள்ளமே

30. சனகரும் புகழ்புவி தாங்கி வாழ்ந்திடும்
பனகரும் புகழ்கலைப் பாவலன்றரு
வனகரன் வையக மகிழ்செங் கோல்புரி
தினகரனெனும் பெயர் சேர்ந்த வேந்தனே

வரலாறு

## தேவியை அரசபைக்கு வரவழைத்தல்

31. மன்னனு மாநில வரசர் மாமறை
துன்னுமாக் கலையினர் சூழ்ந்து வைகுறத்
தன்னுணர் வயைநற் றகையி னாரொடும்
பொன்னரி யாதனம் பொருந்த வைகினான்

32. ஆயகா லையிலவ னமைச்சன் வாண்முக
நேயமாய் நோக்கிநந் நிகரி றேவியைச்
சீயநல் லரதனந் திகழு மண்டபத்
தேயென வருகென வியம்பி னானரோ

33. மந்திரன் மன்னவன் மகிழ்ந் துரைத்தமை
சுந்தரச் சகியராற் றோரைச் சொல்லினன்
பந்துரு வத்தையும் பழிக்குங் கொங்கையார்
விந்துரு வைக்கிது விளம்பினாரோ

34. அரசன துரைமொழிக் கன்பு மிக்கவாய்க்
கரைசெயாக் கவலைகள் காற்றி நீர்த்தெழ
வரை திகழ் தனத்தினன் மன்னன் மாட்டணி
விரைசெறி குழலிவிந் துருவை மேவினாள்
விந்துருவையின் வேதனை

35. வந்த்விந் துருவையு மதலை யின்றியே
நொந்தபா தகியைநந் நூல் சிறந்திடு
மிந்தநற் சபையினி லிசைத்தல் கூடுமோ
கந்தமா லிகையணி காத லாளனே

36. மாநில மணியணி மகிழும் பாக்கியம்
வானநற் றருமக வானை நேரதாய்த்
தானமு மதகிரி தாவுங் கந்துக
மானவை மகவின்றி யழகு மில்லையால்

37. மங்கல மிகுந்திடு மழலைச் சொற்களா
லுங்கமெ லாம்புள காங்கி தம்கொளத்
துங்கமா யுயரிள மேனி தோய்த்திட
விங்குவாழ் வாழ்வின்றி சிறந்த தென்கொலோ?

38. இம்மையு மறுமையு மியைந்த நற்பயன்
நன்மக விலாதவர் நாடல் கூடுமோ
செமைசேர் மறைமொழி செப்பி வாசக
மெய்மையே கழற்கழல் வேந்தர் வேந்தனே

39. மாதவ னாரணன் மகிழுங் கேசவன்
சீதரன் திருமகள் சிறந்த மார்பினன்
கோதறு கோயிலின் பூசைக் குற்றமோ
வாதுலர்க் கனநிதி யளித்தி லாமையோ

40. புத்தி னின்றிநாம் பொருந்தி வாழ்வது
மெத்துணை வாழ்வென வெண்ணுகின்றனை
முத்தர்க டவத்தவர் யோன யோகிகள்
பக்தர்கட் கனநிதி பரிவி னல்கினால்

41. பொருந்திடுஞ் சந்ததி யென்று பூவையுந்
திருந்திய மன்னவன் நனக்குச் செப்பவும்
வருந்திறந் மன்னவன் மந்திரிக் குரைத்
தகுந்தன நிதிகலை யருளுவாயென்றான்

## ஆலய பூஜையும் தானதருமமும்

42. வேந்த் னல்லுரை பினிதென் வமைச்சன் மேதினி
சேர்ந்த மாலயன் சிவன் கறுப் படர் திரிசூலி
வாய்ந்த மாரி மாகாளி வம்மிசகுல தெய்வ
நேர்ந்த வாலய பூசைநை வேத்திய நிரப்பி

43. புரிந்த மாத பராதுல ரெளியவர் புவியில்
விரிந்த நீள்சடை மெய்யணி நீறது விளங்கத்
தெரிந்த யோகிய ரருமறை திறம்பிடா தொழுகி
யிருந்த நல்லறமாகிய வில்லறத் தினர்கள்

44. மன்னு மாமறைதவறிடா தாகம முறையாய்
கன்ன மீதினி லோதிடுங் காசினிக் குருக்கள்
இன்னு நற்பெரி யோர்களை யழைத்தவர்க் கெல்வா
மன்ன மாநிதி யணிமணி கலையிவை யளித்தான்.

## தேவரம்பையர் வருகை

45. ஆதி மாமறை தவறிடா தாகம முறையாய்
நீதி மாதவன் மலரடி வணங்கி நிச்சயமாய்ப்
பேதி யாதுல கிளையர சாட்சி செய் பெருமை
சோதி வானவர் தெரிந்திதை யறியுஞ்சூழ்ச் சியதாய்

46. மாவரம்பைநற் கனிதிகழ் வையக மதனிற்
கோவறம்பிச காதர சாட்சி செய் குணவான்
மாவரும்புகழ் தினகரன் மகிமை தேர்ந்திடவே
தேவரம்பையை விடுத்தனர் நயம்தெரி பாக்கே

47. வந்த கன்னியர் மணிநகர் மன்னனை மருவி
சந்த வின்னிசை பாடிநிர்த் தனச்சதிர் காட்டக்
கந்த மாலிகை யிணிமுடி மன்னனுங் கனிவாய்
இந்த மாதருக் கிசைந்தநற கொடையரு ளென்றான்

48. அமைச்ச னவ்வுரை கேட்டபி னவர்தமை யழைத்து
இமைக்கு மாமணி யெழினிதி கலைகளை இனிதாய்ச்
சமைத்து நல்கிடத்தோகையர் சுதனிலார் கொடைநன்
சுமைக்கி லேயென வமைச்சனு மரசனுக் குரைத்தான்

49. மன்ன னெய்தியக் கன்னியர் மலரடி வணங்கிச்
சொன்ன காரிய மென்னெனச் சுந்தர வரசே
நன்ன யச்சுத னில்லா ராதன நயந்தார்க்
குன்னு மாமறை வீடிலை யெனவுரைத்திடுமால்

50. ஆன தாலுரை செய்தன மெனவணி மன்னன்
தேன வாமொழி மாதரே செல்வனுடண் டாதற்
கான காரிய மருள்புரி வீரென வவர்நாம்
போன பின்புநின் பூமியி லொரு புகழ் மறையோன்

51. மைந்தன் மேவுமுன் மைந்தனாய் வளர்ந்திடு நாளில்
பந்து நேரரெனப் படாவிளங் கொங்கைபால் சுரக்கும்
விந்துருவைக்கிம் மேதினி யாளவோர் மதலை
வந்து திப்னென் றுரை செய்து கன்னியர் மறைந்தார்

தேவி யோசனைப்படி ஊர்ப்பிள்ளைகள் வளர்த்தல்

52. தேவகன்னிய ரகன்றபின் வேந்தனுந் திகைப்புற்
றாவி யிவ்வுல கிருந்தென்கொல் அரிகிரி யமல
மூவ ருக்குண்மா முதல்வாநா ராயண முகுந்த
பாவி யெற்கருள் புரிந்துநீ யாள்பக வானே

53. என்று பற்பல துதிபுரிந் திருக்குமவ் வேளை
துன்று தாற்குழல் றேவியந் துணையடி வணங்கிக்
கன்ற னின்பனங் கண்ணனி னருணலங் காண்போ
மன்றன் மாலையா யினிதுறை கேளென வகுப்பாள்

54. வாச மாமல ருயிர்தசை வழங்கன்றில் பேடாய்
நேசமாகநா மிருவரு மகிழ்ந்துநிச் சயமாய்
ஆசை நாயக விருந்துநற் சுதனிலா மையினா
லேசு மேபுவி யலடென வென்செய்வோ மிறையோய்

55. மனைவி சொல்லுரை யமுதெனத் தினகரன் மகிழ்ந்து
வினவி மந்திரி நந்நக ரதில்விரை வாகக்
கனவிலுங்கண்டு மகிழ்தரும் புதல்வரைக் கவனித்
தெனது பத்தினிக் கினிமையாக் கொடுத்திடு கென்றான்

56. அவ்வுரைப்படி அமைச்சனு மந்நக ரதனிற்
செவ்விளஞ்சிறு புதல்வரைக் கவின்செயக் கருதி
நவ்விசேர்விழி யாளிட நல்கிட நங்கை
கவ்வை தீர்ந்துநற் புதல்வரைக் கவின்செயக் கருதி

57. தண்டைசேர் சிலம்பொடு மரைஞாண் டகதென
வெண்டிசா முகங்களுமெழிறிக ழுணியிமைப்பக்
கண்டபேர் மகிழ்வுங்றுங் கரக கணங்கவின்
வண்டுசேர் நறுந்தா ரிவை கொடு வனைந்தனரால்

58. அமுதருத்திநல் லன்னமுமருத்தி யன்னார் வாய்க்
குமதமாமொழி கேட்டினி துவந்து கொண்டாடிக்
கமுக கோட்டுநற் சரிகை சேர் கலைகளை யணிந்து
இமையறாதுகண் ணோக்கியர னந்தமெய் தினளே.

ஏழைப் பிராமணன் வீட்டில் குழந்தை பிறத்தல்.

59. மார்பி லேற்றியு மணித் தொட்டி லேற்றியு மகிழ்வாய்
ஆர்வ மீறிட லவர்களை வளர்க்குமந் நாளிற்
பார் புகழ்ந்திடுங் குலிங்கநா டதிற்பகர் மறையோன்
சேரு மாதவப் பன்னியத் திருவினை நிகர்ப்பாள்

60. காமனோ மலர்க் காமனோ காசினி புகழி
ராமனோ யதிராமனோ நயவம்போ ருகத்தின்
பூமனோ வெழிற் பூமனோ வெனப் புவி புகழ்
யாமனேகர வம்மயி லொருமக வீன்ற

61. ஈன்ற பாலகர்க் கினியபா லாயிட மின்றி
யான்ற வேதியன் வறுமையினுடன் மெலிந் தயர்ந்தே
யேன்ற மாத்திர மிசைமறையோர் மறு கெங்குந்
தான் றிரிந்துபலுணாக்கொடு புசித்தகந் தளர்வார்

62. அனைய தனமையர்க் கந்நகர் யாக்கரு மறைவார்
தனைய னோடுநின் றாரமுந் தரித்திர மிடியான்
மனவி யாகுல மடை வதென் னம்மையார் மன்னன்
றினகரன்மகப் பிரிதியாற் செகதலம் தன்னில்

63. அன்ன தானமு மகிலநற் றானமு மணிசேர்
சென்ன தானமுந் துகிலினிற் றானமுந் துலங்க
மன்னு மாதவர் தபசிகள் முனிவரர் மறைக்
டுன்னும் வேதியர்க் கியாவையும் வழங்குவான் றுணிந்தான்

64. அந்த மன்னன்பா லேகென வருமறையவனுஞ்
சந்த மாமுலைத் தையலுந் தனைய னுந் தானுஞ்
சுந்த ரப்பொழில் சேர்மணி நகரது துலங்க
வந்த மைந்தனன் றினகரன் மணிமுக வாயில்

## பிராமணக் குழந்தை தினகரன் அரண்மனையில் வளர்தல்

65. வந்த வேதியன் மந்திரி சேவா மகிழ
முந்த மாமறை மொழிப்படி யாசிகண் மொழிந்து
கந்த மாலிகை யணிமுடிக் காவலற் கெனது
சிந்தை யாகுலந்த தவிர்த்திடச் செப்புவீ ரென்றான்

66. ஆய்ந்த நற்கலை மந்திரி யரசனுக் குரைப்ப
வாய்ந்த தாமரை மதிமுக மிகமகிழ்ச்சியதாய்
தேய்ந்த நுண்ணிடைத் தேன் மொழித் தேவியினுடனே
காய்ந்த வெம்மிடி மறையவன் றனைவந்து கண்டான்

67. கண்டு தாழ்ந்தடி வணங்கிநற் கஞ்சனை நிகர்வோய்
புண்ட ரீகமா மலரடி புவியதிற் பொலிய
தொண்ட னேனிலிற் பொருந்துதல் தொல்குலமரபோர்
பண்டை யேபுரி தவமென மறையவன் பகர்வான்

68. மன்னர் மன்னனே மாதவன் மலரடி பணியுங்
கன்னனே கதிர் மணிமுடி தரித்தகா வலனே
பன்னு மாமறைபயின்றுமிப் பன்னியை மணந்து
நன்ன யம்பெறும் புதல்வனைப் பயின்றன னன்றே.

69. பாவ கன்றனக் கருத்துபல லில்லைபார்ப் பனிக்குச்
சீலயாய்ருந் துதர்குரி யனவிலை சிறுமை
வேவ யைக்கடந் திடவருள் புரிகுவாய் வெற்றி
யானை சேர்புயத் தினகர வள்ளலா மரசே

## வேறு

70. வேதிய னுரைத்த வாய்மை வேந்தர்கோன் மகிழ்ந்தெமக்
காதிதேவ னாகுமால் அறைந்த மாற்ற மாமென
கோதிலாத வேதியன் குழந்தை தன்னை வாங்கிமா
மாது நேரு மாதுகையின் மகிழ்வுறக் கொடுத்தனன்

71. வாங்கி யுச்சிமோந்து கொஞ்சி மகிழும் வேளை கொங்கைகள்
வீங்கி விம்மி யமுதநீர் விளங்கிட சொரிந்ததால்
தூங்குநல் லிமட்டுறந்த தூயவான் மதிக்குநே
ரோங்கு சாந்திர காந்த நின் றுகுத்தகாந்த மொக்கவே

72. சொரிந்தபா லருந்தியே நற்சுதன் மகிழ்ச்சியாகவே
யிருந்துவாழ வெண்ணி மங்கையிறைவனோடு ரைத்திடத்
திருந்துமன் னவன்மனந் தெரிந்த வந்த வந்தணன்
பொருந்துகொற்றவர்க்கு கந்த புதல்வனைக் கொடுத்தனன்

73. கொடுத்த வேதியன் மனங் குளிர்திடக் கடற்றிரை
யுடுத்த பாரியை வளங்க ளூற்றபூமி நிதியளித்
தடுத்த பூகரக் குழாய்க ளகிலமே துதித்திட
விடுத்தனன் கதிர்க் குலத் துதித்த வேந்தர் வேந்தனே

## மற்ற குழந்தைகளை அவரவர் அன்னையிடம் அனுப்பிவிடல்

74. மன்னவன் மகிழ்ந்துநகர் மைந்தர்களை யீன்ற
வன்னையர் மகிழ்ந்திட வனுப்பிவிடு கென்ன
சொன்னவுரை தன்சிரசு மேற்கொடு துணிந்தே
யின்னனையர் பாற்புதல்வர் மேவுற விடுத்தான்

## தேவி கருவுற்ற ஆண் குழந்தை பெறுதல்

75. செய்யதன மெனம்புரவ லன்றனது சேய் போல்
மையயகிழ் வெய்திட வளர்ந்துவரு நாளில்
ஐயமிகு நுண்ணிடை யளாயவுயர் தேவி
செய்யகுண விந்துருவை சேர்கரு வடைந்தாள்

76. அடைந்துமுதிர் சூலுற வணங்கெழின் மடைந்தை
படந்திக ழராவின்முடி பரதநடனஞ்செய்
தடர்ந்ததிரு மால்கர மமர்ந்தவனை யீனு
மிடைந்தவொளி முத்தமென மிளருமக வீன்றான்

77. ஈன்றமக வுக்கினிய சாதக மிசைத்துச்
சான்றவர் தபோதனர் கடக்க மறையோர்கள்
ஆன்றகலை தேர்கவிஞ ரன்பனை வோர்க்குந்
தோன்றுகலை யன்னநிதி சுத்தமொடு நல்கி

## பெயர் சூட்டல்

78. வளர்த்துவரு நாளின் முதன்மைந்தனது நாமந்
தழைத்துவரும் இந்துவதனன் சகல கேள்வி
விளைத்தகுண விந்துருவை யீன்றமகவின் பேர்
இளைத்தவரை யன்புசெய் சதாகன் இவண் என்றே

## இருவரும் ஒன்றாய் வளர்த்தல்

79. நாமயது வைத்திவரை நாருமொரு மேனி
சேமமுற வெய்துமகிழ் செய்தினிது வந்தார்
தாமமுறு யார்பரிவர் சகலகலை கற்கும்
வாமமிகு நற்பருவம் வந்திட வளர்ந்தார்

80. கனகமலை யுலவுகட லனையதமி ழோத
வனகமலை யுறுமாச மாமணி கருக்கே
பனகமலை பரமர் துதி பரவீ வளர் பொதியை
வனகமலை நுகர்முனியை நிகர்குருவும் வந்தான்

81. வந்தகுரு வானவனை வானவர் வழுத்தி
யந்தணனை முந்துமம ரேசரென நாடிச்
சிந்தையி னுவந்துவழி சென்றடி வணங்கி
மைந்தர்மணி யாதனம் வழங்கிட வுறைத்தான்

82. உறைந்தமதி வேதிய ருவந்திட விளங்கி
நிறைந்த மணி காசுநிறை தூசுநிதி நல்கிச்
சிறந்தவென் மகர்க்கரிய திண்கலை யனைத்து
நிறந்தர வுணர்த்துகென மன்னவ நிகழ்த்த

83. ஓமென வுவந்திளமை யுற்றுரிய மைந்தர்
காமரு கலைக்கட லருந்தினர் களிப்பப்
பாமருவு மாமறை பழுத்தவறி வாளன்
தேமருவு தேனென முறைப்படி தெரிந்தான்

84. மன்னுகலை யாய்பொழுதும் வண்பத மருந்திந்
துன்னுமனை மீதுதுயில் போழ்துமயர் தோளார்
பன்னும்விளையாடல் புரி போழ்துமியல் பாக
நன்னல மொடும்பிரி விலாதுநினி வாழ்வார்

85. இன்னவித மாகவிரு வோர்களு மியைந்து
நன்னய மிருந்தலை நன்கினி துணர்ந்து
துன்னுமத மாபுரவி தோன்றிட நடத்தி
மன்னன் மகிழ் வெய்தவிவர் வாழ்வுபெறுநாளில்

## வேறு மூத்தவனுக்கு முடிசூட்டல்

86. மன்னனு மகிழ்ந்து தேவி மதிமுக பார்த்து மானே
பன்னுமாக் கலைகடேர்ந்த பாலகர்தமக்குச் செம்பொன்
மின்னுமா மகுடஞ்சூட்ட விழைந்தன னிருவர் தம்மில்
மன்னிய புதல்வனயாவன் வழங்குதி தெரியவென்றான்

87. தேவீர் மனம் போல்வென்றா ள் சேட்ட புத்திரற்கேயென்றான்
ஆவது சரியேயென்றா ளமைச்சனை யரச னோக்கிச்
கோவற நிலைமைதேர்ந்தோய் கூறெனக் குறிப்பாலுன்னி
பூவர சரர்வோர் தங்கள் புதல்வர்க்கே யன்றிவேறாய்

88. வந்தபுத் திரற்குநல்கன் மனுமுறை யல்லவென்று
தந்திரியுரைக்கநேதன்றக்கன தெரிவித் தன்னான்
சிந்தையை மகிழச்செய்து செகதலம் புகழ்ந்து வாழ்த்த
சந்திர வதனனென்னுந்த தனையற்கே நியமித் தாங்கே

89. மங்கல முழங்கச் சிங்கம் வயங்கர தனபீடத்துத்
துங்கநன் மறையோர் வாழ்த்தத் தோரண கும்பந் தோன்ற
மங்கையர் நடனமாட மாநிலத்தரசர் சூழ
தங்கநன்மணிசேர் மோலி தரித்தனன் றனையற்காங்கே

## சந்திரவதனன் சிந்தனை வேறு

90. கனகமா மணிமுடி சூட்டக் காவலன்
நனதினை மவனொடு தரணி யாளுநாள்
மனதினின் மதிமுக வள்ளல் வையகந்
தனை நமக் களித்தல்சால் பிலதென் றெண்ணினான்

91. மன்னுமா மணிமுடி மன்னர் மன்னனு
மன்னையும் வேறிருந் தாய்ந்து தேர்ந்தெனை
யின்னிலம் புரக்கவென்றியைவித் தாரிதற்
கென்னிப முரைக்கென வெடுத்துக் கூறினான்

## சோதிடர் கூற்று

92. மந்திரி சோதிடர் வருக வென்றுதான்
சுந்தரத்தூதினாற் சொற்ற பின்னவர்
புந்தியில் கணிதநூல் பொருந்தத் தேர்குவோர்
மைந்தனா மன்னன் முன் வந்து தோன்றினார்

93. கணிதசோதிடர்களைக் காவலன் மகிழ்ந்
தணிதிகழ் எந்தையர்க் கமைந்த சாதகம்
துணிவுடன் தெரிந்ததைச் சொன்மி னோவெனப்
பணிவுடன் பலனிது பகர்தன் மேயினார்

94. உந்தைதா னுற்பவித் துற்ற ராசியில்
வந்திடு மிரவிசேய் வருட மேழுரை
சிந்தையா குலம்பகை தீனஞ் சேர்ந்தும்
னொந்திடு மதுதவிர் நுட்பங் கேட்டியால்

95. எள்ளோடு பகடு கம்பளி மிலாங்கலி
யொள்ளிய காயரி யுற்ற தண்டுலந்
தெள்ளிய பூசணி சிறந்த காய்நிதி
வள்ளலே யுதவுவாய் மறைய வர்க்குநீ

96. உதவிநன் மந்தவா ரத்திலுண்மையாய்
பதமொடு பால்பழம் பச்சைத் தண்டுலம்
இதமொடு சருக்கரை யெண்டங் காயவல்
சதிரொடு படைத்தருட் டபனன் சேயினை

97. துதிபுரிந் தாலவன் றுன்ப மேகிடக்
கதிகொடுப் பானெனக் கழறி யேகினார்
மதிமுகத் தானெனு மன்னர் மன்னவன்
கதிரவன் சேயடி காணு மாசையால்

**மன்னன் சந்திரவதனன் பூசித்தல்**

98. மந்திர நூண்முறை வகுத்துச் சோதிடர்
புத்தியாலுரைத்தன பொறுத்து மன்னவன்
றந்தணன் மறையவர் தமக்குத் தானங்கள்
சிந்தையி லவர்களி சிறப்புற் றோங்கவே

99. ஓதிய வுரைப்படி உளுந்து சர்க்கரை
கோதிலாப் பாஸ்பழம் குறித்தெங் காயொடு
தீதலாத் திலமதிற் சிறந்த வெண்ணெயு
நீதிசேர் மலாவக நிறைந்த சூடனும்

100. பூசணிக் காய்நறும் புகைகொள் சந்தனம்
வாசமெல் லிலையடைக் காயும் வன்மையா
மாசறப் படைத்து நல்லருக்கன் மைந்தனை
மாசறத் துதித்தனன் மந்த வாரமே

**வேறு**

101. பொன்னே மணிமே புகழ்வா னவனே
மன்னே மருளன் மகிழ்மா நிதியே
யென்னே யழுவந் தெளிமேயற் கருள்வாய்
அன்னே சனியீ சவருட் கடலே

102. கடலாகிய கவ்வை யகன்றினிதா
மடல் சேர் வனசக் கழல் வந்தனையை
திடமாய் மனமே துதி செய்திடவே
விடுவாய் கரடப் பரிவித்தகனே

103. மணியே திகழ்தா மரைநே ரடியைப்
பணியே புரி பாலகனுக்கெதிரிற்
றுணிவாய் வருவாய் சுகராசிகருக்
கணியா யுறையா திபரா பரனே

104. பரமேயெனவுன் னிருபா தமலர்
திரமா யடிப்யேன் றெரிசித்திடவே
வரமா தவர் போற் றிடுமா வருளைத்
தரவா தபணன் றசந் ததியே.

105. ததியீ தெனவுன் னிருதா டொழுநன்
மதிவந் ததுமென் னமகிழ்ச் சியதோ
விதியின் செயலென்பர்களவ் விதியு
மதிகந் துதிசெய் யருணன் மகனே

106. மகவான் விழியா யிரமாய் வரவே
மிகவாக் கினைவே தியனார் சிரமு
மகலும் படிசெய் தனையற் புதனே
பகவா னென மேன்மைபடைத் தவனே

107. மையின் வதனந் தெரியாப் பயிராய்
மையின் குழலா யறியா மகவாய்
நையுமடியேன் றனைநன் கருள்வாய்
வையம் புகழுஞ் சனிமாதவனே

108. தவயாத தற்பர ஞானவருட்
சிவயோக திகம்பர தெள்ளமுதே
நவயாகிய தேவர்க ணாயகமே
பவதீக்கிய பாக்கிய நல்லருளே

109. நல்லே னலனென் னினுநல் லருளா
லல்லே நிகர்மா சுகளைந் தருள்வாய்
எல்லை மகிழ்வொய் திடவெற் குமுனம்
வல்லாய் வருவாய் அரியின் மதலாய்

## சனிபகவான் நேரியற்றோன்றுதல் வேறு

110. இன்னவிதந் துதிபுரிய வெழிறிகழு மதிவதன வேந்தன் முன்னே
தன்னஞ்சே ரொளிபரவுந் தினகரன்மா மதலையரு ளல்கவெண்ணிப்
பொன்னுபவுயணியவுமி புணைந்தகன்மார் பதிற்பதைக்கம்
பொருந்தக்கையின்
மன்னியங் கணந்திகழ வயமிகும் வாசயப்பரியின் மகிழ்ந்து தோன்றி

111. வானோர்கண் மலர்மாரி பொழிந்திட நன்முனிவரர்கண் மகிழ்ந்து
போற்றத்
தேனாரு மலர்மாலை பரியாவா சக்கலவை திகந்தம் வீச
மானாரும் துதிசெய்முத்து மகிபதிபோற்றிடும் பகவான் வந்துற்றாரே

112. கண்டுமன மகிழ்ந்துபர மானந்த வெள்ளமெனுங் கடலின் முழ்கி
யண்டர்மக வான்தவத்தோ ரருமறைகள் புகழ்ந்தேத்து மமலர் முன்னோர்
பண்டுபுரிந் திடுந்தவத்தாற் சிறியனேன் பவமகலப் பகவானுன்றன்
புண்டரிக மலரடியைப் பெற்றனனென் றேதுதிகள் புகல்வதானான்

## வேறு

113. செய்யனே போற்றி போற்றி திகழுநற் கனியே போற்றி
வையகம் புரப்பாய் போற்றிமறைமுதற் பொருளே போற்றி
துய்யநல் லவமுதே போற்றி சுகமருள் பகவா போற்றி
அய்யனே போற்றி போற்றி அரியின்மா மதலாய் போற்றி

114. பகவானே போற்றி போற்றி பத்தியி னுழைந்தாய் போற்றி
சகமகிழ் தாய் போற்றி சனிச்சுர பகவா போற்றி
யகமலர்ந் மணியே போற்றி வரகுர்புரி பவனே போற்றி
சுகமருள் தேவே போற்றி சுந்தரா போற்றி போற்றி

115. என்னையாள் பவனே போற்றி ஏழைபங்காளா போற்றி
வன்னமா மணியே போற்றி வாயசப் பரியாய் போற்றி
நன்னய குருவே போற்றி நாதவே தாந்த போற்றி
அன்னையே போற்றி போற்றியடியனை ஆள்வாய் போற்றி

## பகவான் திருவாய் மலர்தலும் மதிவதனன் வேண்டலும் வேறு

116. வந்த பக வானுமதி வதனன் முக நோக்கி
யுன்றனது பக்தியை யுவந்தினி துகந்தேன்
எந்த வரம் வேண்டுமென வேந்தனுரை செய்வான்
தந்தையென னத்தைவரை சாதகமுணர்ந்தேன்

117. உணர்ந்தவதி யேழுகரை யுகந்தவரு டந்தான்
அணங்குற வெழுந்தடிக ளாயனை வருத்தத்
துணிந்தனி ரெனக் கணிதர் சொற்ற வுரையாலே
பணிந்தன னவற்றொடர்செய் பண்பது தவிர்ப்பான்

118. என்னவுரை செய்திட வதிர்ந்தபக வானு
மன்னவிது விந்தை நெடு வையகமும் வானும்
துன்னுமுனிவரோடு துலங்குமல ரோனும்
என் வரவு நீக்கினார்கள் யாவருள ரென்பாய்

119. ஆதிசிவ னார்பலி யிரந்துண வமைத்துப்
பாதியெ யுமைக்கருள்செய் பான்மையது செய்தேன்
நீதிதவ றாதுவளர் நீலயயிலோனைச்
சாதி பிற வாய்க்குறவர் தங்களொடு சேர்த்தேன்

120. இந்துமதி யைத்தவனே தனது கையில்
வந்தவடி வாள்கொடு வதைக்கவும் வலித்தேன்
சந்த நள னுந்தனையர் தாரணி யிழந்தே
யந்தர தாயடவி யேகவருள் செய்தேன்.

121. தருமன் முத லைவர்கள் தராதல மிழந்தே
வெருவுறு வனம்புகுத மேவியருள் செய்தேன்
திருவுறையு மார்பரவர் சீதையை யிழந்தே
மருகியுளம் வேறுற மயங்கவருள் செய்தேன்

122. இவ்வித நிகழ்ந்தவண மெத்துணை யுரைக்கேன்
செவ்விபெறு மதிவதன வென்றுரைசெய் தேனை
யெவ்விதய தாயினு மெனந்தை துயரென்னும்
பவ்வமகலக கிருமை பார்க்குரு கென்றான்

வேறு

123. மதிவத னன் சொல்லும் வாச கத்தினாற்
கதிரவன் புதல்வனும் கருணை கூர்ந்து நாம்
துதிபுரியேழுரை மதிய வருடஞ் சொன்னதி
லதுதவிர்த் தேழுரை மதியமாக்கினோம்.

124. என்றுரை செய்திடு மீசன் றன்னிட
மன்றலந்த தார்மதி வதன னெந்தையே
யொன்றுத லுனதருட் கொத்த தன்றினி
நன்றினி தாயெனை நண்ணு நீயென்றான்

125. ஐயனு மகிழ்வதா யடுத்த வாரமே
வெய்தென மேவிநா மருள்சேய் வோமெனாத்
துய்யவன் சந்திர வதனன் செய்திடும்
மெய்மைசேர் பூசையை வியந்து மறைந்தான்

126. மன்னனும் பூசையை மறப்பி லாதுளந்
துன்னிய வன்பினாற் றுணிந்து செய்திட
மன்னிய மந்த வாரமு மடுத்தது
பின்னிவன் மனதைவற் புறுத்திப் பேணினாண்

## மன்னன் சந்திரவதனன் வனத்திற்குச் சென்று பகவானைப் பூசித்தல்

127. அரண்மனை தனிலிருந் தரிச்சித் தோமெனில்
வரமிகு மனமதோர் வழியி னாடிடாத்
திரமென வறிந்தருச் சனைக்குச் சேர்ந்திடும்
விரவிய பொருளெலாமமைத்து மேன்மையாய்

128. இரும்பதிற் கரியவன் படிவ மின்புற
வரம்பதா யமைத்துநன் மகிழ்வதாகவே
தரந்தரு மலர்க்கரம் வயங்க வன்பொடுந்
திரம்பட வெடுத்தனன் றெளிந்த நெஞ்சினன்

129. தம்பிறித் திரைபுரி சமையந் தான் தெரிந்
தும்பரும் புகழ்தரு மொருவன் றாளினை
நம்பிய சந்திரவதன ராசனும்
பம்பிய கானதிற் பரிவோ டேகினான்

130. அருகினிலிருந்திடிய் யாருங் கண்டுதம்
பரிவுறு தந்தையின் பக்கஞ் சாற்றுவர்
தெரிவுறா வழியிடைத் தூரஞ் சென்றொரு
தருவளர் கானிடை யுறைதன் மேவெனா

131. கரபிமா மலைதனிற் கரந்து பாய்தரும்
அருவியின் கரையடுத் தாங்கோர் சூழலின்
மருவளர் சண்பக மரங்க ளோங்கிய
அரியதோ ரடவியுட் குறியோ டேகினான்

132. ஏகியவ் வுழியிருந் தினிய காய்கறி
யாகிய பூசணி யமையெ ளெண்ணையும்
பாகமாய் கருப்புரம் பாக்கு வெற்றிலை
சேகரப் படைத்துய சிரவி சேயினை

### சாதகன் எழுந்து அண்ணனைத் தேடல்

133. துதித்திட மன்னனுந் துணிந்த காலையி
லுதித்திடுங் கதிவர னொத்த தம்பியுஞ்
சதித்துயி லெழுந்துபின் றமையிற் காண்கிலா
திதத்துடன் றேடுவா னெழுந்து போயினான்

134. தேடியே யெங்கணுந் தெரிவு றாமையால்
வாடிமெய் சோர்ந்தொரு மரத்தினி னீழலி
லாடி நேர் கதுப்புடை யனுச னித்திரை
கூடியே துயின்றனன் குலைந்த நெஞ்சினான்

### சந்திரவதனன் தொடர்ந்து வனத்தில் பூசித்தல்

135. இவ்வண நிகழ்ந்துழி யிருந்து பூஜை செய்
செவ்விசேர் சந்திரவதனன் றிண்கதிர்த்
திவ்யநன் மதலையை நினைந்து சிந்தையிற்
கவ்வைதீர்ந் திடத்துதி கழறன் மேயினான்

136. வேதனே விமலனே விளங்கும் கர்த்தனே
சோதியே பகவனே துலங்கு நித்னே
நீதியே ருன்னரு ணிறைந்த வேழையேற்
காதியே யருள்புரியருணன் மைந்தனே

137. சிவ்வோடு நவ்விலே சிறந்து நின்றவா
மவ்வோடு வவ்விலே மகிழு மாதவா
அவ்வுயோங் காரமா யமர்ந்த நாதனே
கவ்வைதீர்த் தருள்புரி கதிரின் சேயனே

138. பாலனேன் மனத்திடர் பகவ வோர்ந்திநுங்
காலதா மதமெவன் கருணை செய்திட
வேலைவாய்த் துரும்பென மெலிவு மேழையைச்
சீலமா யாண்டருள் டேவ தேவனே

139. வையகமுனிவரொடு மனிதருக்கு வருங்குறிகளைத் தெரிவித்துத்
தூய்ய நல்லன்னம் பந்துடனுகருஞ் சுகமிகு கரடநற்பரியாய்
செய்யனேகனியே தினகரமணியே தேவனே வெனத்துதியாது
பொய்யுரைப்பவரை யக்குங்கார்கரியோய் போற்றிடா
தவர்களுக்கரியோய்

140. காலையி னியம முடித்திட வெண்ணிக்கதிரவெனழுமு மெழுந்து
பாலொளிக் கங்கை படிந்துபார் காரணைப் பணிந்திடும் வாயசக்
கொடியோய்
வேலை னொலியோ விண்முகி லொலியோ மேதினி முன்னமே யதிரும்
காலையி லெழுந்த வொலிகொலோ வென்னக் கருச்சனை புரியமும்
முரசோய்

141. ஆதவன் மதியங் காரக னருண னாண்டாப்பான் புகழ் வருடை
கோதிலா விடயு மிதுனநற் கடகங் கூடியராசி நாட்களுமுன்
ஓதிய முனிவர் தேவர்மா தவரு முலகிடை வாழு மன்னுயிரு
நீதியாய் தத்த நிலைதவறாம னெறிவழி யொழுகுமாணையினாய்

## வேறு

142. அன்னமே குயில்களே யமகு மன்றில்காள்
பொன்னிறத் தோகைகாள் புள்ளிமான்களே
நன்னல வாயசப் புரவி நாதனை
மன்னுமிக் கானகம் வரக்கண்டீர்களோ?

## சனிபகவான் சந்திரவதனன் முன மீண்டும் தோன்றுதல்

143. என்றுரைந் தன்பினா லியைந்த பூசனை
துன்றிய மனத்தினிற் றுணிந்து செய்திட
வன்றிறல் வாயசப் பரியின் மன்னியே
கன்னினுக் கிரங்குறுங் காமதேனுப் போல்

144. வந்துநற் பகவனு மகிழ்ந்து மன்னனைச்
சந்தமாய் பகவனு மகிழ்ந்து மன்னனைச்
சந்தமாய் நீபுரி தவத்தின் றன்மையா

வந்திர வுலகமே புகழு மாதவாற்
சந்திரவதனனே சாற்றக் கேட்டியால்

145. உரைத்தன னேழுரை வருட முன்னியுன்
நிரைத்தவ முகந்தனன் நிகரில் வாய்மையாய்
தரைக்குமோ ழுரையெனுங் கடிகை சார்ந்துநின்
றுரைத்தன மகன்றிடத் தொடரு வேனென்றான்

146. அப்படி யியற்றிடாதருள் செய் தோயெனிற்
தப்பித முறும்புவி சகல ராசிய
மெப்படி யுன்மன மென்ன வேந்தனுஞ்
செப்புரைப் படியெனைச் செய்து காவென்றான்

147. வந்துநா னுன்னிடை வசிக்குங் காலையிற்
பந்து கருந்தைதாய் பணிசெய் யேவலோர்
சிந்தனை செய்திடா திகழ்ந்து சீறியே
யுன்றனை யுயிர்வதை செய்ய வுன்னுவார்.

148. ஆயகா லையிலுனக் கருள் செய் வோமெனா
வாயசக் கொடியினான் மறைந்து வானுறுந்
தூயமா மதிமுகற் றொடர்ந்து வைக்கினான்
நேயமா யினிவரு நிகழ்ச்சி கூறுவாம்

## தினகரன் முதலியோர் பிள்ளைகளை தேடல்

149. தினகர னெழுந்துதன் செல்வர் தங்களை
யனமயிலவனை யணையிற் காண்கிலன்
மனமிகு வருந்தினன் மன்னுங் கண்ணினை
யினனுறப் பெற்றிழுந் தாரி னென்பவே.

150. மந்திரர்க் குரைத்து நம் மைந்தர் தங்களை
யெந்தநற் பகைவோர் விசைந்த பூதமோ
அந்தரத் தவனையோ வறிய கிற்றிலேன்
றந்திர மாய்க்கொடு போன தன்மையே

151. தெரிந்திலே னவர்களைத் தேடி நாடிடப்
பொருத்திய காவல்செய் புனித மாக்களை
வரும்படி புரிந்திது வரைகு வீரெனத்
திருந்துகோற் றினகரன் செப்பினானரோ

152. மந்திரர் யரையும் வருக வென்றலும்
அந்தணராதியர யமைந்த யரவரும்
வந்தணர் வரன்முறை மைந்தர் குற்றமை
முந்துறந் தெரிந்தன ரின்னன் முடினார்

153. வந்தனர் காவலர் வளை தடிக்கையு
மந்தமில் லிடையினி லமர்ந்த சூரியும்
வெந்திறல் வாளொடு மிடைந்து சுற்றினார்
யெந்தையே சரணமென் றிறைஞ்சி னாரரோ

154. காவல்செய் மாக்களே காதன் மைந்தரை
யேவல்செய் பகைவரோ யாவரோ விவண்
பூவணை தனிற்கொடு போயினாரவர்த்
தாவியே விரைவொடுந் துருவிச் சாற்றுவீர்

155. எனவுரைத் திடவவ ரெங்குஞ் சுற்றினார்
வனமலை கானகம் வையந் தேடினார்
இனமின மாயவ ரெங்கு நாடினார்
நனைமலர் திகழ்புத ரெங்கு நண்ணினார்

156. புதரிடைக் காவலர் புகுந்து பார்க்கையி
லிதமிகுஞ் சதாகனை யிரண்டு துண்டமாய்ப்
பதனுறுங் கத்தியாற் படுத்தி வீட்டியே
சதை தலை மூளைகள் தகர்ந்து சிந்தியே

157. கூரங்கள் வேறதா யிசைத்துத் திண்குடர்
மார்பனதின் மாலையாய் வயங்கித் தோன்றின்
சீர்திகழ் சந்திரவதனன் செய்திடும்
பார்புகழ் பூசையப் பகவன் மாயையாய்

158. கண்டனர் காவர் காதகாவுனை
யண்டிய துணைவனை யச்சமின்றியே
துண்டுதுண்டாகவே துணித்துக் கூடுமோ
வெண்டிசா முகங்களு மினிதி னாமவோ

159. அடியிடி போறெடன வார்த்த காலையில்
வடிவுசேர் சந்திர வதனன் கூறுவான்
கொடியவாட் கிரையெனக் கொடுத்து முங்களை
படியினிற் பயிரவி பூசை பண்ணுவேன்

160. என்றிவ னுரைத்திட விகல்செய் காவலர்
மன்றலந் தார்முடி மன்னர் மன்னன்பாற்
சென்றவ னடியல ரிறைஞ்சிச் செப்புவார்
துன்றிய மலைவனஞ் செடிக னேடினோம்

161. ஆங்குறு புதரிடை யமைந்த வேதியன்
தீங்குறு புதல்வனஞ் செல்வ கோவினைப்
பாங்குற வதைத்துநற் பூசை பண்ணுவான்
நீங்கிய குடறலை வேறு நீக்கியே

162. வேறுவே றாயமைத் திருந்த வேந்தனைச்
சீறியே னிப்படிச் செய்திட்டாயெனத்
தேறியே யுங்களைத் தேவிக் கின்பலி
கூறுசெய் வாளினாற் கொடுப்ப னென்றனன்

163. ஆனதாற் சிலரைவைத் தகன்று வந்தனந்
தேனவிர் மாலையாய் செயலி தென்றனர்
தானதைக் கேட்டலுந் தயங்கி வேந்தனு
மான்விழித் தேவிபான் மயங்கி வீழ்ந்தனன்

164. வீழ்ந்திடு மரசனை யேந்தி மின்னனாள்
ஆழ்ந்தவொண் கருத்துடை யரச வென்னென
வாழ்ந்தநம் பாக்கிய மனைய மைந்தனைப்
போழ்ந்தனன் சிரமறப் புதல்வன் வாளினான்

165. மந்திரர் சொன்னதை மறுத்து நம்புவி
தந்தணி மணியடி தரிக்கச் செய்தனம்
இந்தநற் றீவினை யிசைதற் கோவென
விந்துரு வையுமுள மயர்ந்து விம்மினாள்

## வேறு

166. மைந்தாகண்ணே மாமணியே யென்மகனேசீர்
கொந்தார் குழல்விந் துருவை பயின்றகுணக் குன்றே
சிந்தா குலமென் னிதய மகற்றுந் திருவே நான்
எந்தாய் வந்தே னுனையா னிழந்து மிருப்பேனோ

167. என்னா மன்ன னேங்கிய சத்த மயலெங்குந்
துன்னா நன்மா நகர்சளர் வீரர் துயரோடு
முன்னா முன்னந் துணையடி போற்றி மொழிகின்றார்
மன்னா செல்வோ மறையவன் வாழு வனமென்றார்

168. மன்னவ னஞ்சொற் கேட்டுடற் புண்ணாய் மனம்வாடி
கண்ணுங் காத்துங் காவலர் முன்னே கடிதேச
சண்பக தருவுஞ் சாந்துங் கோங்குத் தழைத் தோங்குந்
தண்பொழி லிடையே தனய னிற்ற லியல்கண்டார்

வனத்தில் பூஜை செய்யும் சந்திரவதனனைத் துன்புறத்தல்

169. பார்த்தார் தீயோய் காதக பாவி பழிகாரா
தீர்த்தாயுன்றன் றுணைவனை வாளாற் றிருகோடும்
போர்த்தா யன்பு பேர்வரு மாசை பெரிதாகச்
சேர்த்தாய் பூஜை செய்வது ஞானத் திறமேயோ

170. பேசான் பூசை பெரிதென வெண்ணும் பெருமானை
யேசா தேசி யிழுத்து மடித்திரு கைகாலைக்
கூசா மற்பா சத்திடை வீக்கிக் கோமான்முன்
கூசா வொன்றும் பேசில னீகா ணெனச் சொற்றார்

171. கண்டே வேந்தன் மதிமுகன் றன்மேற் கடுங்கோபங்
கொண்டா னண்ணற் தச்சனைக் கூவிக் கொடியோனை
மண்டா னேச வாய்ச்சியி லாடி வலியொடும்
விண்டா னேகும் படிபுரி கொன்றான் விறலோடும்

வேறு

172. வேந்தன் சொன்ன மொழிப்படி வாய்ச்சிவின்
ணேந்தித் தச்ச னியற்றுங் காவையில்
வாய்ந்த யாயதி மாமுகனைப் பிரிந்
தேய்ந்த மந்த னிருக்கையை மேவினான்
சதாகன் வருதலும் உண்மையுணர்தலும்

173. தம்பியத்ததி யிற்றுயி னான்றவிர்ந்
திம்பர் யாவரு மெய்துதல் காணுற
வம்பி னும்விரை வாகவந் தண்ணனை
வம்பு செய்து வதைத்திடுந் தன்மையை

174. கண்டணன் கட்டுங் காவலர் தங்களைத்
துண்டமாகத் துணிப்பணி தென்னென
விண்டனன் விண்டு வேணிகர் தாதையை
யெண்டி கைத்தனை நீயுமி தென்கோவோ

175. என்றி சைத்திட வேந்தன் சுதற்றிழ்உக்
கன்று மிந்து வதனனைக் கட்டவிழ்த்
தன்று மந்த னருச்சனை செய்யிடஞ்
சென்று நோக்கினன் சேனையுந் தானுமே.

176. நோக்கும் போதுமுன் னோக்கிய தன்மைகள்
தாக்கு நற்றலை பூசணிக் காயதாய்
ஆக்கு மீரல் அமைந்திடுங் கீரையையாய்த்
தீக்கும் ரந்தந் திகழெட்பிண் ணாக்கதாய்

177. கால்கை துண்டங் கருட்புநற் றுண்டமாய்
பால் பழங்கள் படைத்திடுந் தன்மையாய்ப்
பாலன் செய்திடு பூசனைப் பண்பதைச்
சீல வேந்த னறிந்து தியங்கினான்.

178. யன்ன சந்திர வதனவேன் மைந்தனே
என்ன பூசை யியற்றினை நீயென
அன்ன வனுரைப் பானரு ணன்மகன்
மன்னு மேழரை யாண்டுனை யன்னியே.

179. வந்து சேருவ னென்றுநம் மாநகர்ச்
சுந்த ரக்கலைச் சோதிடர் சொற்றனர்
அந்த நாட்டொட்டருக்கனின் மைந்தனை
வந்த னைத் தொழின் மன்னித் துதித்தனன்

180. மந்தன் பூசை மகிழ்ந்தடி யேன்முனம்
வந்து னக்கருண் மாவர மென்னென
வெந்தையை வருத்தா வரமீ யென்றே
னந்த நாதனு மன்புடன் கூறுவான்

181. உந்தைக் கேழரை வற்சர முண்மையே
எத்தனைத்துதித் தேற்றிய தன்மையாற்
றந்தன மதியே ழரைதா னென்றே
மந்தன் பின்னு மறைந்துறைந் தானேன்றே

182. இங்கு பூசை யருச்சனை செய்திடின்
மங்கும் புத்தி யெனவனந் தேடியே
துங்க மாய்த்துதி செய்திட வெம்பிரான்
வன்கண் வாயச மீது மருவியே.

183. மந்திர ரத்துதி யான்மகிழ் வெய்தினான்
உந்தைக் கேழரை நாழிகை யுண்மையா
யென்ற னாக்கினை யேற்படு மில்லையேல்
வந்த ராசிகள் நாள்வழு வாகுமே.

184. என்ற வார்த்தைக் கிசைந்தடி யேன்றனை
துன்றி யேதொடு மெந்தையைத் தொட்டிடே
வென்று ரைத்தன னென்றனைப் பற்றினான்
ஒன்று நானின்றி யேனிஃது உண்மையே.

**தினகரன் சாகத்துணிதலும் பகவான் ரோன்றியருளலும்**

185 சந்திர வதனன்சொற் றாதை கேட்டுமே
யென்றனக் கிதுவரை யிந்த வார்த்தையைச்
சொந்த மாகநீ சொற்றி யில்லையான்
யந்திர வாளினான் மரண மாவனே

186. மைந்தனே யெனக்கையில் வாளை யேந்திடும்
அந்தநே ரத்தினி வருணன் சேயவன்
வந்துநீ மாய்ந்திடல் வருந்துந் தீவினை
யென்றனால் விளைந்தன வென்று கூறுவான்

187. மதலையைப் பிரித்ததும் வந்த காவலர்
கதமறத் தலைசுடல் கண்ட மாக்கியுஞ்
சுதனையே வாய்ச்சியிற் றுணிக்கச் செய்ததும்
இதுவெலா மென்றனா லிசைந்த செய்கையே.

188. அன்றியு மன்னவா வமைந்த தொன்றுநான்
இன்றுனக் குணர்த்திட விசைவு கொண்டுளேன்
துன்றிய மரங்களுஞ் சுரபித் தீர்த்தமு
மொன்றிய பொழிலிதே வுகந்த தெமக்கே.

189. சந்திர வதனன் சார்ந்திணி தமர்ந்து
எத்தனை மனதி லிறுகப் பற்றி
வந்தனை செய்து வழிபா டியற்றிய
இந்தத் தலமென் னிருப்பிட மாகும்

190. ஞாலம் புகழ நன்முடி புனைந்தபின்
சோலையி னிடையே சுரபிக் கரையிதில்
ஆலய மெனக்கு அமைத்திடு வீரென
சீலன் கதிரவன் சேயெடுத் துரைக்க

191. என்றுரை பகவனை யிறைஞ்சிவேந்தனும்
நன்றென மகிழ்வுற நறைகொள் மாலையாய்
இன்றுநின் சந்திர வதனற் கென்கையால்
துன்றுநன் மணிமுடி சூட்ட வெண்ணினேன்

கணிபகவான் சந்திரவதனனுக்கு முடிசூட்டல்

192. ஆனதாற் போகுவ மணி நகர்க்கென
வானமா மணியகன் வழுத்த மன்னனுஞ்
சேனையங் காவலர் திரண்டு மொய்த்திட
மேனையோர் கருமணி நகர மெய்தினார்

193. வந்துநன் மாநகர் மகிழ்ச்சி யோங்கிடச்
செந்திரு நிறையுநற் றொருவும் வீதியுஞ்
சுந்தர மனைகளுந் துலங்கத்தோரண
மந்திரக் கும்பமும் வயங்கச் செய்துமே.

194. ஆலயந் தனிலறு கால பூஜைகள்
சீலமாய் நடத்திநற் சிங்கத் தாங்கிய
கோலமா யரதன குயிற்றும் பீடமே
பாலனாஞ் சந்திர வதனப் பார்த்திபன்

195. இருந்திட வந்தண ரினிய மாமறை
பொருந்தியே யுரைத்திடப் பூமி மன்னவா
திருந்திய கரஞ்சிர மேற் குவித்திடத்
தருந்திரை யெனமுழ வொலி தழங்கிட

196. வானவர் நன்மலர் மாரி பெய்திட
மீன்விழி மடவையர் குரவை விஞ்சிடத்
தேனுறு மாலைகள் சிறந்த மாமுடிப்
பானுவின் மதலையும் பண்பிற் சூட்டினான்.

197. மணிமுடி சந்திர வதனன் பெற்றுய
ரணிதிகழ் சதாகனு மன்னையுந் தந்தையுந்
துணிவொடு மனமகிழ் துலங்க வையகம்
பணிவுற விருந்தா சாளப் பார்த்துமே

198. மனமகிழ் வெய்தியே மந்தன் சென்றபின்
தினகரன் முதலா வனைவருஞ் சேர்ந்து
பணிவுடன் மதிமுகன் பகவனைப் பரவியவ
வணிதிக முடவியின் மறைவிட மணுகினர்?

**சந்திர வதனன் பூசித்த இடத்தில் பகவான் அருளியபடி கோயில் அமைத்தல்**

199. கார்முகிற் றிரண்டு கதிரவ னொளியுடன்
பாரினைப் பிளந்து பரிமளிப் பதுபோற்
பேரழ கோடு பேரா சுயம்புவாய்
வீறுட னாங்கு விளங்கினான் கரியோன்

200. சந்திர வதனனுந் தந்தையுந் தம்பியு
யந்திரி மார்களும் மறையவர் தாமும்,
வந்தவ ரெல்லாங் கண்டதி சயித்துப்
புந்தியின் மகிழ்ந்து போற்றினர் பகவனை

201. படிமிசை வீழ்ந்து பாடிப் பரவி
விடத்தலை மரத்தி னடித்தலந் தன்னில்
கடிமலர் கமழுஞ் சண்பகச்சோலையிற்
குடி லொன் றமைத்துக் கோயில் சமைத்தனர்

202. செண்பகஞ் செறிந்தவத் திருத்தலந் தன்னைச்
செண்பக நல்லூரெனப் பெயரிட்டனர்
தண்புனல் சுரபியுஞ் சிவகங்கை எனும்
புண்ணிய நதியாயப் பொலிந்தது வாங்கே.

203. குச்ச வேய்ந்த குடிலது தன்னி
லிச்சையோ டிருந்த சனிபக வானை
குச்சன் என்றும் கூறி யழைத்தனர்
குச்சன் வாழுமூர் குச்சனூ ராயிற்று.

204. சிவகங் கையெனுஞ் சுரபிக் கரைதனிற்
கவினுற விளங்குங் கரடப் பரியனை
தவவலி மைசாற் றனயனைப் பெற்றோன்
பலவினை தீரப் பரவித் துதித்தனன்

**தினகரன் சனிபகவானைத் துதித்தல் வேறு**

205. கோலமே மிகுந்த வெள்ளினற் கனிக்குக் கோவளரிந்திரன்
வெண்டோல்
தாலமே நிகருங் கரதல் நீட்டச் சாணள வெட்டிடா தகன்ற
சீலமே நோக்கித் தன்னின மயர்ந்து திகைபுறுந் தன்மையைத் தெரிந்து
சாலமீ துயரும் வரைக்கரி யருளுந் தகைமைசே சுரபியாயலைபையாய்

206. பகவனை வணங்க மனத்திடை நினைந்து பயத்திடை வாமு யண்டுசுந்
தொகுதருந் திரையங் கரத்தினான் மணிகள் சொரிந்திடுஞ்
சுரபியா நதியாய்
அகவிதழ்க் கமுநீர் முகையதை யரவென் றஞ்சியே யிளங்குறுகிரங்கப்
பகையறப் பேதைக் குருகுதா லாட்டும் பாகறு
பாண்டியநாடுடையாய்

207. பங்கையன் பரமன் பாற்கடற் றுயின்றோன் பண்ணவ ரனைவருங் கூடிப்
பொங்குமாய்ப் புகழுங் குச்சமா நகரிற் பொருந்திய பெருஞ்சிறப் புடையோய்
துங்கமா மாடன் இருளன் பேய் பூதத் தோடம் தகற்றிவெவ்வுயிர்க்கும்
மங்கல மருளி மதுகர நிரைசேர் மணத்திசெவ்வுலரி மாவையினாய்

**வேறு**

208. வித்தா னவனீ யவவோ விரீவா
மெத்தே வருமுன் னருள்வேண்டுவராற்
சித்தே யுயர்செண் பகமா நகர்வாழ்
முத்தே பணியோ னசிகா மணியே

**குச்சனூர் கோயிலில் சனிபகவானமர்ந்து கொள்ளல்**

209. சுகவர மருளியே துலங்குங் குச்சனூர்ப்
பகவனு மனமகிழ் வாகும் பக்தனாஞ்
சகம்புகழ் முத்துவேள் தமையன் சோனைவே
ளகமகிழ் கோயிலி லமர்ந்து வைகினான்

**முத்துவேள் பெருமை**

210. இத்தகைப் பெருமைசா லிறைவ னாகிய
சுத்தநல் வாயசப் பரியின் றாயனை
நித்தலு நினைத்தரு நியம முற்றுவோன்
முத்துவேள் பெருமையை மொழிகு வாமரோ

211. பூமகள் மருவிய புனிதன் சேவடித்
தாமரை மலர்புகழ் தங்கு நாவினன்
மாமறை யிசைபெற வழுத்து மந்தணர்
நேமன முறைதவறாத நேர்மையான்.

**வேறு**

212. சீர்பொருந்திய செந்திரு நிறைதரு மார்பன்
தார்பொருந்திய புயத்தினன் கலைதெளி சான்றோன்
ஏர்பொருந்திய செந்தமிழ்ப் பாவலர்க் கினிதாய்
பார்புகழ்ந்திடங் கனகமா நிதியருள் பண்பான்

213. வேலை சூழ்புவி மாதவர் வேதியர் மேலோர்
நூலை யோதிய பாவலர் தம்மைநூன் முறையாற்
காலை மாலையெனக் காலமுந் துதிபுரி தனவான்
சேலை நேர்விழி யார்யதன் திடவச்ர தேகன்

214. முத்தமிழெனு மியலிசை நாடக முறையாற்
சித்திசேர்கலை பழகுசெந் தாமரை யகத்தான்
புத்தநல்லமு தனையவன் விண்புரு கூத
நத்தியேதுதி புரிந்திடத் திகழ்தரு நத்தான்

215. தவளை பாண்செயு மடுவினிற் வனசத்
தவளை யாகம தணிந்துசக் கரயணிந் தணிபடத்
தவளை யேந்திய மால்பக வானிவர் சரணேத்
தவளை யன்றியார்க் கும்வளை யாமுடி தரித்தோன்

216. பொதிகை மாமலைச் சார்புடை யான்புகழ் வண்ணன்
றுதிகை கூப்பியெந் நாளும் வந் தனைபுரி சுகவான்
விதிகை யாப்புகழ் வரநதி கோத்திர மேலோன்
நிதிகை மாறின்றி வழங்கிடு நிபுணகெம்பீரன்.

217. மருளு மாயையைத் தவிர்த்திட மாதவர் முனிவோர்
தெருளு நற்கலை தெரிந்திடுஞ் சான்றவர் சிறந்தோர்
அருள்பொழிந்திடு மன்பர்க ளனுதின மமருஞ்
சுருளிமாமலை யுடையவன் சுகுணகெம் பீரன்

218. முன்ன மாதவம் புரிபகீ ரதன்முக மலர
வென்னை யாளுடை யெம்பிரா னருளிரு நதியை
பின்னும் வைகையிற் செல்கெனப் பெருகிய பெற்றி
துன்னு முல்லையா றுடன்றிகழ் சுருளிமா நதியான்

219. கார்நிறக்குழ லரிவையர் கவின்பெற வணியுஞ்
சீர்பொருந்திய மஞ்சணீர் செய்யதிற் பெருகி
யேர் பொருந்திய சாலிக ளினியதா யோங்கும்
பார் பொருந்திய வளமிகும் பாண்டிநா டுடையான்

220. மன்னர் மன்னவன் மகிழ்வளஞ் சேருநற் காசை
கன்னன் ராசய மகிபதி புரக்கும் காசினியிற்
கன்னலே திகிர் கழனிசூழ் செண்பக நல்லூ
ரென்னுங் குச்சமா நகர்க்கிறை யோனெழின் மதனன்

221. கவள மாமத கரியிடைப் பவனியிற் கண்டு
பவள வாயிதழ்ப் பாவையர் மதன்சரம் படவே
துவள நுண்ணிடை யம்பரஞ் சோர்ந்திடத் தொடருங்
குவளை மாலிகை, யணிந்திடுங் குமுணகெம் பீரன்

222. சரமும் வாயுவுஞ் சண்முகன் றோகையுந் தகைசா
லூரன் முகுந்த வானரமுமற் றுரியவுமுடைய
திர னிறுத்துற கதிதெரி நகுலனே திகைக்குந்
தரன் மிகுத்திடு நடமிடு புரவிசேர் தனதன்.

223. தண்ட மேந்திவெஞ் சமரிடை வருந்தரி யலர்கள்
துண்ட மாய்க்கரந் தாள்புயந் துணிபட வெதிர்ந்தே
யண்ட கோளமு நடுங்கிட வார்த்தெழுந் தமரர்
கண்டு தான்வியப் படைத்திடுங் கரடவா ரணத்தான்

224. ஆழி, சூழ்புவி தனிலத் தணர்பெரி யோர்கள்
ஏழி சைப்புல வோர்ப்புவி மானிட ரினிதாய்
வாழி யென்றசொல் பெறுதற்கு வையக மதனின்
மேழி யைக்கொடி யாக்கொண்ட விதரண வள்ளல்

225. அடிபிடித்தென வார்ந்தெழுந் தமரரு மஞ்சத்
துடிதுடித்தெழும் போரினிற் பகைவர்க டொலைய
படிபடித்தலத் தெனவுரைத் திடுவச னத்தி
னிடியிடித்தென வொலித்திடு மெழின்பணி முரசான்

226. ஆதி மாமறைக் கலைகளை யன்புற வாய்ந்து
நீதி நன்னெறி பிசகிடா தொழுகிநீ ணிலத்திற்
சோதியாகிய பகவனை நினைந்துதொல் லுலகிற்
கோதி லாவர சாட்சியிற் குறிந்தவா ணையினாள்.

227. அன்ன தன்மைய னாகிய முத்தப்பு பதிக்கு
மன்னுங் காதலர் மதனனேர் முத்தைய மகிபன்
பின்னு நற்றுணை சோணைய வள்ளலும் பிறந்து
நன்ன லத்தோடு நானிலம் புரந்திடு நாளில்

228. வள்ளலாகிய சோணை மகிபதி வரத்தாற்
றெள்ளு நற்கலை தெளிந்திடு திருமலை முத்துப்
பிள்ளை தோன்றிநற் பகவனை யருச்சித்த பெட்பா
லுள்ள வாறுநற் சோணைய மகிபதி யுகித்தான்

229. அன்ன வற்கிளை யானெனு மங்கச னனையான்
மன்னு மாமறை யாகமக் கலைதெளி மனத்தான்
கன்னன் முத்துங் கடசெவி முந்துங் கன ந்தரு முத்துஞ்
சொன்ன முத்துக்க ணிகரில்லாத்தூய தோர்முத்து.

230. முத்து முத்தெனக் கருளென வனிதையர் மொழிந்து
துத்ய மாயட வெழுதருஞ் சுந்தர சொருபன்
பத்தியாய்ப் பகவான்சர ணாம்புயம் பணிந்து
சத்தியம் பொறை தவறிடாதொழுகுநற் றவத்தோன்

231. இன்ன தன்மைய னாகிய முத்துவேட்கிசைந்து
மன்னு நற்றுணை கதன்சுற்றம் யாவரு மகிழ்ந்து
நன்ன லத்தொடுஞ் சனீச்சுர நாதனை நாடிப்
பன்ன லத்தொடும் பாரிடைப் பரவியின் புறுவார்

232. வாழி மாதவர் வாழி செழுந்தமிழ்
வாழி முத்து மகிபதி சோணைவேள்
வாழி குச்சநுன் மாநகர்க் கோயிலும்
வாழி நற்பக வானருள் வாழியே

சுபம்

## சனீஸ்வரபகவான் தோத்திரப்பாக்கள்

(முன்னோர் பரம்பரை தர்மகர்த்தா)

திரு பூலோக திருமலைமுத்துப்பிள்ளை அவர்கள் இயற்றியது

அவ்வுதல் லெளவ்வுவான அஹரரீங்கா சிமூர்த்தி
ஒவ்வுநல் லெளவ்வுவான உகாரரீங்கார ஜோதி
எவ்வுநல் லெல்வுபக்கம் எழில்நவக்கிரஹம் சுற்றும்
வவ்வுநம் கதிரின்சேயே வளம்பெறக்காப்பாய் போற்றி

செங்கதிர் விரித்திலகு தினகர சுசீரச்
செல்வ சிங்கார வழகன்
செப்புமுறை யுமதினிய செவியில் விழவில்லையோ
தேவனே கொடி தாமோ
வெங்கலி யெனைத் தொடர்ந்தே விரட்டாமலிவ்
வேளை வந்தருள் புரிகுவாய்
விளவொணானந்தசுக வன்புதர நற்புகழ் விளங்க
அருள் ரவியின் தநுஜா
கொங்கு மலியாரமணி திண்புய விசாலனே
குண சகல பரிபூரணா
குவலயமதில் கொடிய மாயை யிருளகலவே
கோகனக பாத மருள்வாய்
வங்கமடர் சோலைசூழ் செண்பகப்பதி மீதில்
வளர்கின்ற சனியீச் வரா
மங்காதிலங்கு கன சிங்கார ரூபநய
வங்கார மணி மார்பனே
பண்டோது மறையெலாம் உனது விபரீதநிலை
நற்பயனி லாமை தனையான்
பன்முறையுணர்த் துவதெலாங்கண்டும் உள்ளபடி
பணிந்து றுதிகைக் கொண்டுநான்
உண்டானபடி சொல்கிறேனுனது தயவன்றி யோர்
துணை யெவரு மிலையே
ஓதரிய ஜோதியே சுந்தர சொரூபனே
உன்னைப் பரசாத முகிலே

கொண்டாடுவோர் துயர மகல வருள்புரிகின்ற
கோதிலா மணி வண்ணனே
கொண்டல் நிகர்வண்ணனே யண்டர்துதிபுண்யனே
கோலா கலக் கண்யனே
வண்டாடு சோலை சூழ் செண்பகப்பதி
மீது வளர்கின்ற சனியீச்வரா
மங்காதிலங்கு கன சிங்கார ரூபநய
வங்கார மணி மார்பனே
எந்தேவர்கரு மந்தனெதிர் வருவ தற்கஞ்சி
ஏகிமறை வார்க ளென்று
எந்தவுலகுந் தெரியுமே எவர்கள் உணராத
பேர்கள் யாரிங் குளார்கள்
உத்தேசமொன்று நினையா மலுமதடி யிணையை
யொரு பொருட்டாக வெண்ணி
உண்மைவழி வகையாவு மின்னதென மலையாம
லோது மிதுநல் சமயமே
முத்தாரமணி கொங்கை மடவார்களாசையெனு
மோகவி பரீத வலையில்
முழுமனது வைத்துந் தனடிமலரை நினையாது
மூடமதி யேனாகினன்
சித்தேரு சோலையடர் செண்பகப் பதிமீது
ஜெய முலவு சனியீச்வரா
சிங்காரனே யதிக கம்பீரனே யழகு
வங்கார மணி மார்பனே
நான்காண வுன்னழகு சுயரூபமது கொண்டு
நற்கருணை தந்து தவுவாய்
நவின தினகர சுகுண நாதப்ரதாபனே
நாகரிக மிகு தேவனே
தேனோடு மாலையணி திடபுய விசாலனே
தெள்ளமிர்த மாந் தேவனே
வாரி யெனத் திகழுகின்ற சனீச்சுர தேவனே
திருவடியெனக் கருள்வாய்

வான்தாவு வெண் பரியிலிங்கித நடங்கொண்டு
மண்டல மவைப காட்டியே
வலமிகு வல்லொய்யார் மகிமை புனையழகுமா
சோணை நித்தில மிலகிட
தேன்சோலை சூழவுயர் செண்பகப் பதிமீது
ஜெய மூலவு சனியீச்வரா
சிங்காரனே யதிக கெம்பீரனே யழகு
வங்கார மணி மார்பனே
எத்தேவர் களுமுனது அதிகார மதனிலே
யீடுபட் டவர்க ளின்றி
எவர்களுனை மீறினவ ரணிபுகமு திருநடன
விண்ப கலா சோபிதா
முத்தாரமணி களவ முலையினர்கள் மயல் வெறியில்
மூழ்கி யலையாது வுமதின்
முழுவுபலி கமலபத தெரிசென மெனக்கருள்
முழுநீள மணி யழகனே
கைத்தாள மோடுடுக்கைபம்பை எனஇவை
கறங்கவருள் சொரியு மரனே
கருதியன வரதமும் துதிசெய்தல் கண்டுமேன்
மவுனி எனும் நிலை கொண்டுளாய்
முத்தேறு கன்னல் நிறை செண்பகப்பதிமேவும்
மாகதிர் தருகுமரனே
முன் காணவே யருள்கரந்தாரு மின்பநய
வங்கார மணி மார்பனே
தண்டமிழ் நகல் புனை ஞானப்ரகாசனே
சம்பரம் நிறைந்த வடிவே
சண்டாளரைக் கரு வறுத்தவர்கள் நசியவே
தாக்கு முகரப் பிரபுவே
கண்டுமொழி மடமினார் வெகுமோக மதுமேவு
கடலதி லுழன்று நிதமுங்
காமக் குரோத மோடலைய வைக்காதுகண்
பார்த்திடச் சமயமீதே

தொண்டு புரிவதிலேது குறையிருந்தாலு மது
சொல்லு மடியேனிது முதற்
சொற்படி நடக்கும் வகையைப் பொருதவே நீயுரை
சுந்தரானந்த சுகிர்தா
அண்டர்புகழ் செண்பகப் பதிமீது வென்று
மதியன்பு நிறை சனியீச்வரா
அங்கா விலங்க வார்துங்கா பிரசங்கம் நிறை
வங்கார மணி மார்பனே
பந்தபாசக் கடலில் மூழ்கியென வரதமிப்
பாவி யலையாத படிகண்
பார்த்திடத் தருணமிது பகறரிய ஞானரச
பக்தி லக்ஷண சோபிதா
எந்த நேரத்திலு முனிருகமல பாதமதை
யேற்றி யர்ச்சனை புரியுமோர்
ஏழைக் கிரங்கிடா தென்னவுன் மனதும்
இரும்போ கரும் பாறையோ
கந்தமவி யாரமணி காரண விசாலனே
கனியி னமுதே யமரர்கள்
கடிமலர் குவியப் பொழியினிய மரகதமொழிகள்
கண்டஞ் சிடம் சொருபனே
சந்தமும் தங்கியொரு சண்பகப் பதியிது
தழைக்க உயர் சனியீச்வரா
தண்காவிலங்க வளர் சங்கோசை பரவுமெழில்
வங்கார மணி மார்பனே
தொண்டுபுரி யடியவர்கள் தொல்வினை யகற்றிடுத்
தூய மங்கள நாதனே
சுடர் விரிந்திவருமதி ஜோதிமணியே யதிக
சுத்த நற்குண ரஞ்சிதா
பண்டுயறை யோலமிடு பகவனே பார்க்குமவர்
பாக்யமருள் சனியீச்வரா
பன்முறை யுணர்த்துவது முன்செவி புகாதென்ன
பாவியிசை கிருபை யிலையா

வண்டுமொழி மடமாதர் மோகமதில் வீழாது
மகிமைப் ரசாத மருள்வாய்
மங்கள மிலங்குநய கங்கண வசிகரா
மறை யடர் மாலையழகா
தண்பரவு செண்பகப் பதிமீது யின்பந்
தழைக்க வளர் சனியீச்வரா
சர்வகலை வல்லவா வமரர்துதி நல்லவா
சன்மார்க்க யோக சுபனே
மாயா விகாரமிகு மோயாத பாவியர்கள்
மாமோக மாதரிருள் சேர்
வலைபொட்டிலே பட்டுநிலை கெட்டு மதியற்ற
வஞ்சனைக் கொடு பேயனை
காயாது நீமனது சாயாது வுமதினிய
கருணை யருள்புரி சமயமே
கர்த்தனேயினியகனி யமிர்தமே சகலகுண
காரணானந்த வடிவே
சேயானஎன் துயரமது கண்டு தாய்மனஞ்
சிறிது மிளகாது விவளோ
ஜெகரச்ஷகா கருணையது வைத்து நீயெனைச்
சீர்திருத் திடவருகு வாய்
தீயாத சோலையடர் செண்பகப் பதிமீது
ஜெய முலவு சனியீச்வரா
சிங்காரனே யதிக கம்பீரனே யழகு
வங்கார மணி மார்பனே
பூரா தனத்தவர்கள் முறைகள் வழுவாத படி
போற்று திருமலை முத்துமால்
புனிதகுல தெய்வநய சுகிர்தவரனே யதிக
பூஜா பலப் ரதாமா
வீரான தவிடம்புரசு நாதகர பூரியண்டம்
வெடித்திடு முழக்க முடனே
வான்தாவு வெண்பரி யின்நடனங் கொண்டு
வெகு நடனமிட் டாடியே

பேரான நற்சோணை முத்துவீரன் றமது
பேட்டி கொண்டெதிர் நின்றிட
பிரபல மதான கடமாநகர் மழை சொரிய
பெருமை குல விடுதீபமே
சீரான சோலையும் செண்பகப் பதிமீது
ஜெய முலவு சனியீஸ்வரா
சிங்காரனே யதிக கெம்பீரனே யழகு
வக்கார மணி மார்பனே.

சுபம்

உ

வாழ்க ஸ்ரீ பகவான் நாமம் — வளர்க இறைவன் பணி

# குச்சனூர் ஸ்ரீ சனீஸ்வர பகவான் திருக்கோவில்

## வேண்டுகோள்

அன்புமிகுந்த இறையருட் செல்வர்களே!

குச்சனூரை தனது ஸ்தலமாகக் கொண்டு சுயம்புவாகத் தோன்றி பக்தர்களுக்கு வினை தீர்த்து அருள் புரிந்து வரும் ஸ்ரீ சனீஸ்வர பகவான் திருக்கோவிலைப் புதுப்பித்து குடமுழுக்குச் செய்யும் பணிக்காக செயலாற்றி வருகின்றது. இறைபணியில் உள்ளம் கொண்ட மெய்யன்பர்களுக்கு இது ஒரு அரிய தருணமாகும். திருப்பணிக்கு உத்தேச மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. அன்பர்கள் பொருளாக வாரி வழங்கும் படி கேட்டுக்கொள்ளப்படுகிறது. திருப்பணிக்கு நன்கொடை வழங்கும் அன்பர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு பண விடைத்தாள், காசோலை, கேட்பு வரைவோலை இவைகளுள் யாதேனும் ஒன்றின் மூலமாக அஞ்சல் வழி அனுப்பும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது.

ரூபாய். 25,000க்கு மேல் வழங்கும் அன்பர்கள் பெயர் சலவைக் கல்லில் எழுதி கோவிலில் பதிக்கப்படும்.

ஸ்ரீ பகவான் கிருபையும், அருளும் அனைவருக்கும் கிடைக்கப் பிரார்த்திக்கிறோம்.

குச்சனூர்

11.07.2003

**இரா. ராஜா.** M.A., B.L., — *நிர்வாக அதிகாரி*

**எம்.எம். திருமலைமுத்து** — *நிர்வாக அறங்காவலர்*

**அருள்மிகு சுயம்பு ஸ்ரீ சனீஸ்வரபகவான் திருக்கோவில்**

**குச்சனூர்** - 625 515. தேனி மாவட்டம்.

பஸ் ரூட் : தேனியிலிருந்து உப்புக்கோட்டை வழியாகவும்.
சின்னமனூரிலிருந்தும் உத்தமபாளையத்திலிருந்தும்
மார்க்கயன்கோட்டை வழியாக குச்சனூருக்கு அரசு பஸ் வசதி உண்டு